# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## பதின்மூன்றுவதுதொகுப்பு

(வைத்தியப் பகுதி)

பதிப்பாசிரியர் :

புலவர். வி. சொக்கலிங்கம்

தமிழாசிரியர் (ஓய்வு)

சரசுவதி மகால் நூலகச் சங்கம், தஞ்சாவூர்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகச் சங்கம்

இ.பி. 1988] [விலை. ரூ. 20-00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண் : 257

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## பதின்மூன்றுவது தொகுப்பு

(வைத்தியப் பகுதி)

*பதிப்பாசிரியர் :*

**புலவர். வீ. சொக்கலிங்கம்**

*தமிழாசிரியர் (ஓய்வு)*

*சரசுவதி மகால் நூலகச் சங்கம், தஞ்சாவூர்*




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகச் சங்கம்

கி.பி. 1988]  [விலை. ரூ. 20-00

# தமிழ் சுவடிகளின் விளக்கம்

## 13-வது தெகுப்பு

## மருத்துவப் பகுதி

சுவடி தோன்றிய காலம் நீண்ட தமிழ் எழுத்து வரலாற்றில் ஒரு திருப்புமுனை; கலைச்சுவடு, பல்துறை அறிஞர்களின் சிந்தனைச் சுவடுகளை எழுத்தாணி ஏடுகளில் பதிப்பதால் இதற்குச் சுவடி என்று பெயர் வந்ததோ?

காவியங்கள், நாடகங்கள், இசைப்பாடல்கள், புராணங்கள் மருத்துவம் முதலான பல்வேறு மனித இயல் கூறுகளைத் தம்மகத்தே கொண்ட சுவடிகள் ஆயிரக்கணக்கில் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றை நூல்களாக வடித்து இவ்வுலகிற்கு வழங்கி வருகின்றது சரசுவதி மகால். அத்துடன் இந்நூலகத்தில் உள்ள சுவடிகளின் விவரங்களைக் கல்வியாளர் பலரும் தெரிந்து பயன்பெறுமுகத்தான் சுவடிகளின் விவரப்பட்டியல் தொகுதிகளையும் தொடர்ந்து மகால் வெளியிட்டு வருகின்றது. அத்தகைய வெளியீட்டில் மருத்துவப் பிரிவில் இடம் பெற்றுள்ள தமிழ்ச் சுவடிகளின் விளக்கப்பட்டியலில் இது 13-வது தொகுதி ஆகும். அகத்தியர் மருத்துவம் முதலாக வைத்திய வசனம் வரை பல்வகை அரிய மருத்துவ நூல்கள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன. நம்நாட்டு முற்கால மருத்துவர்கள் மகாசாலம், இந்திர சாலம், சோதிடம், மந்திரம், மாந்திரீகம் முதலிய பிறகலைகளையும் மருத்துவ இயலுக்கு உறுதுணையாகும்

வகையில் வளர்த்துள்ளனர். அத்துடன் யோகயுக்திகளையும் மருத்துவமுறைகளில் கையாண்டுள்ளனர். கீதையின் மெய்ப் பொருளை விளக்கும் ஒரு சுவடி இத்தொகுதியில் இடம்பெற்று உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். நம் முன்னோர்களின் இச்சிந்தனைக் கருவூலங்களை நாம் தக்க முறையில் கற்றுத்-தெளிய வேண்டும். தெளிந்த பின் பிறர்க்கும் எடுத்துரைத்து மகிழவேண்டும் என விழைகின்றேன்.

இப்பதிப்பிற்கு மைய அரசு செய்த பொருளுதவிக்கு நாம் நன்றி செலுத்தக் கடப்பாடுடையோம்.

இதனை தொகுத்தளித்த புலவர் வீ. **சொக்கலிங்கம்** அவர்தம் நுட்பமான, தக்க விளக்கங்களோடு கூடிய நூலாக்கப் புலமை பாராட்டுக்குரியது. இத்தொகுப்பினை நன்முறையில் அச்சிட்டு வழங்கிய புதுக்கோட்டை சர்மா ஸானடோரியம் அச்சகத்தின-ருக்கு எனது நல்வாழ்த்துக்கள்.

மா. இராமு, இ.ஆ.ப.,
மாவட்டாட்சியர் மற்றும் இயக்குநர் பொறுப்பு
**சரசுவதி மகால் நூலகச்சங்கம்.**

தஞ்சாவூர்
**17—8—87**

# முன்னுரை

> ''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
> வாய்நாடி வாய்ப்பச் செயல்''

என்பார் திருவள்ளுவப் பெருந்தகையார். பெறுதற்கரிய மானிடப் பிறவியினை எடுத்த ஒருவன், உடற்பிணி இன்றி வாழ்ந்தால் அதுவே அவனுக்குப் பெருஞ் செல்வமாகும். நோய் வருதற்குப் பல காரணங்கள் உண்டு. முன்வினை (பெற்றோர்களால்) உடன் பிறப்பது, தீயொழுக்கம், உண்ணத் தகாத உணவுகளை உண்பது முதலானவைகளால் நோய் வருவது இயற்கை.

உடன் பிறந்தே கொல்லும் நோய்க்கு, உடன் பிறவாத மூலிகை முதலானவைகள் மருந்தாக அமையும். இவற்றைப் பல வழிகளில் பயன்படுத்தி, மகான்கள், மக்களை நோயற்ற வாழ்வில் வாழச் செய்தனர். அவ்வாறு செய்த மருத்துவங்களை வழிவழி கற்பித்தும், ஏட்டில்எழுதியும் வந்தனர். அவ்வாறுஎழுதி வைத்த சுவடிகள் ஏராளம். சித்தர்களும், மருத்துவர்களும் தாம் கண்ட அனுபவ முறைகளை நமக்குத் தந்தனர். அவைகள், சுவடிகளின் வடிவத்தில் உலகெங்கும் பரந்து கிடக்கின்றன.

அவற்றுள் ஒருசில எமது தஞ்சை, சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இடம் பெற்றுள்ளன. அவைகள், மிகச் சிறந்த மருத்துவ முறைகளைக் கொண்டன. அவற்றுள் 666-சுவடிகள் விளக்கக் குறிப்புக்களுடன் 3, 4, 5, 8, 9, 11, 12 ஆகிய தொகுதிகளாக வெளிவந்துள்ளன. 1, 2, 6, 7, 10 ஆகிய தொகுதிகள் இலக்கியங்கள்.

தற்போது, இப் பதின்மூன்றாவது தொகுதி வெளிவருகின்றது. இதில் 667 முதல் 751 வரை உள்ள சுவடிகள் (D. 1301—1500) விளக்கக் குறிப்புக்களுடன் வெளிவருகின்றன. இதன் உட்பிரிவுகள் ஒவ்வொன்றும் (a), (b), (c) எனக் குறிக்கப்பட்டுள்ளன.

தமிழ் மருத்துவப் பிரிவில் மருத்துவச் சுவடிகள் சேர்ந்து வருகின்றன. பெருந்தன்மையும், நற்சிந்தையும் கொண்ட பேரருளாளர்கள் சுவடிகளை எம்மிடம் தந்து, தங்கள் தங்கள் பெயரை நிலைநாட்டிப் புகழடைவதுடன், மக்களையும் காப்பாற்று வார்கள் என நம்புகிறேன்.

இதனை வெளியிடப் பொருளுதவி புரிந்த நடுவண் அரசுக்கும், இதனைப் பதிப்பிக்க அனுமதி தந்த, எமது மகால் இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமான திருவாளர் து. இரா. இராமசாமி இ.ஆ.ப. அவர்கட்கும், தற்போதைய இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமான மா. இராமு இ.ஆ.ப- அவர்கட்கும், இந்நூலக நிருவாக அதிகாரி பொறுப்பு திருவாளர் அ. பஞ்சநாதன் எம்.ஏ , பி.லிப்.சி. அவர்கட்கும் நன்முறையில் அச்சிட்டுத் தந்த புதுக்கோட்டை சர்மாஸ் ஸானடோரியம் ப்ரஸ் அச்சகத்தாருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இிற்காணும் குற்றங் களைந்து, குணம் பொருந்தி வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன்.

இங்ஙனம்,

புலவர். **வீ. சொக்கலிங்கம்**
தமிழாசிரியன் (ஓய்வு)
சரசுவதி மகால் நூலகச் சங்கம்.

தஞ்சாவூர்
2—4—1987

# பொருளடக்கம்

## ஆ



## இ

கி



கு



கூ



கெ



கை



கொ

## ச



## சா

பூ



பெ



பொ



போ



ம

## வி



## வெ



## வே



## வை

# தஞ்சை சரசுவதி மகால் நூலகம்

## தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## 13-வது தொகுப்பு

## மருத்துவப் பகுதி

வரிசை எண்: 1301 சுவடி எண்: 667

# அனுபோக வைத்திய முறைகள்
# குழந்தை வைத்தியம் உரைநடை

ஏடுகள் : 56. ஏட்டின் நிலைமை : சிறிது பழுது. பக்கத்திற்கு : 4-7 வரிகள். அளவு : 38 × 2 செ. மீ. கி. எண்ணிக்கை: 1000. எழுத்து: தமிழ். ஆசிரியர்: பலர். முழுமை : முற்று முளது.

**தொடக்கம்:**

**மாந்தம்—நஞ்சுசுரம்—குழந்தைகளுக்கு**

முற்காலை யிலை ரசம் 1¼ வறுகடித்து கொழந்தைகளுக்கு 8 நாளைக்கிக் கொடுக்கவும்.

மேல் சென்றால் ரெட்டிக்கவும் உப்பு இல்லாத பத்தியம் நஞ்சுற சுரத்துக்கு உப்பு சேர்க்கவும்.

**முடிவு:**

மேல்படி 1 வசத்தைப் பேத்து ஷி காயி உடனே கல்வத்தில் ரெண்டு சாமம் அரைத்து பீங்கான் சட்டியில் வைத்துக் கொள்ளவும்.

மிளகு அல்லது சங்கம் பழம் பிரமாணம் வெல்லத்திலும் வெந்நீரிலும் குடுக்கவும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், அசீரணத்துக்கு அவிழ்தம், ஒருத்தலை நோவுக்கு அவிழ்தம், காது குத்தலுக்கு மருந்து, நேத்திரபித்த மென்பது மஞ்சள் காமாலை மருந்து, கால் பிடிப்புக்கு அவிழ்தம், தேளுக்கு மருந்து, சீதபேதி அவிழ்தம், பக்கசூலை மார்நோவுக்கு கியாழம், கோரோசினை மாத்திரை, மாந்தம், வயிறு உப்பிசம், இசுவுக்கு மாத்திரை முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1302 சுவடி எண்: 668

## திருமந்திரம்—வகாரம்

ஏடுகள் : 49. ஏட்டின் நிலைமை : மிகப்பழுது.
பக்கத்திற்கு : 8—9 வரிகள். கி. எண்ணிக்கை : 1000.
அளவு : 23 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : திருமூலர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

மேனி யெருக்கு விழுதி நுணுச்சாரு
வாணிய தாம்புலம் வழங்கிய வெங்காரங்
கஈணிய மத்தைக் காய்கலருஞ் சுராப்பானம்
தானிப் பழச்சாறு சமனுய்ச் சுருக்கிடே.

**முடிவு:**

கல்லுப்புங் காரமும் போட்டு பழச்சாறுவிட்டரைத்து சிமிள்ப் போலே பண்ணிக் காய வைக்கவும்.

அந்தச் சிமுளில் முந்தின மருந்து வில்லை வைத்து சீலை மண் செய்து உலத்திப் புடம் போடவும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இது, செய்யுளும் உரைநடையுமாக இருக்கிறது, இடையில் வங்கத்துக்குத் திருமந்திரம் என்ற தலைப்பு ஒன்று மட்டும் காணப் படுகின்றது. ஒவ்வொரு பிரிவு தொடக்கத்திலும் 'திருமந்திரம்' என்றே தொடங்குகிறது.

---

*வரிசை எண் : 1303* *சுவடி எண் : 669 (a)*

# இந்திரஜாலத் திரட்டு—வாத காண்டம்-2ங் காண்டம்

ஏடுகள் : 72. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 1700.
அளவு : 23 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

தான முத்திய வைத்திய காண்டத்திலுள்ள
சகலமருந் தானதெல்லாந் தகுதி யாக
வானம் முத்திபெத்த பெரியோர்கள் . . . . . . . .
மகத்தான வாதவித்தை யினி . . . . வெல்வோ

**முடிவு:**

போவானே யிறுதயத்தில் பத்தி முத்தி
புகுவானே புகமாட்டான் பொன்னு பென்று
வாள்வான முன்னூறு ரண்டாங் காண்டம்
பதன்பட ரசவரத மான முத்தே 546.

வாதகாண்டம் ரண்டாங்காண்டம் முத்தும்.
மணல் விநாயகர் துணை.
குழந்தைமரனன் குரு லட்சிக்கவும்.

**காலம்:**

இல்லை

குறிப்பு:

இதில், முதலாங்காண்டம் இல்லை. பாடல்கள் 130லிருந்து தொடங்குகின்றன. 246 பாடல்கள் உள்ளன. மிகவும் செல்லரித்திருப்பதால் செய்யுட்கள் சரிவர வாசிக்க இயலாத நிலையில் உள்ளன.

---

வரிசை எண் : 1304 சுவடி எண் : 669 (b)

# இந்திரஜாலத் திரட்டு-வாதகாண்டம்-3-ம் காண்டம்

ஏடுகள் : 72. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 1700.
அளவு : 23 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

மாந்தரிக மோடி வித்தை

வேறுதுறை யா . . . . . . தற்க் கெல்லாம்
மெய்யான யந்திரமா கால மாடக்
கோதுகிறேன் மாந்தரீகம் வரலா றெல்லாம்
குமரகுரு பரமுருகன் சரணம் போத்தி

முடிவு:

. . . . . . தடா வந்தாக்கால் மூணுங் காண்டம்
வகையான மாரணஞ்செய் சிளைத்தல்
தேகமே செய்யாதே நீதா னப்பா
பாடு வெவ்வேடு மூன்றுங் காண்ட முற்றே. 300

மூன்றுங்காண்டம் இந்திரசாலம் நொக்குவித்தை
எழுதி முகிந்தது முத்தும்.
ஆக காண்டம் மூன்றுக்கு விருத்தும் துளாயிரம்
குளந்தைவாளன் குருசாமி திருவடிகளே சரணம்.

காலம்:

இல்லை

குறிப்பு:

இதில், மாந்திரீக மோடி வித்தை, சருவ தேவதை மந்திரம், வீரபத்திரன், திக்குபாலகன், அஷ்டமாளுகம், அஞ்சுகப் பொடி, உருமாத்தம், திக்கு பெந்தனம், எட்டாங்கற்ம விதி. அட்டாங்க அகோர மந்திரம், மதனகலை வசியம், திலதம், மோகினிப் பெண் துடர முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1305 சுவடி எண் : 669 (c)

# இந்திர காலத்திரட்டு--வாதகாண்டம்-4-ங் காண்டம்

ஏடுகள் : 72. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 1700.
அளவு : 23 × $3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

**இந்திரசால வித்தை**

மாமெருகை மழுவொருகை........
......தனுதன வாதம்........
நான்மெருகை..........வித்தை
நவிலுகிறேன் நந்திகுரு நாதாக் கள்தான்

முடிவு:

முத்திபெறுந் தவயோகி யாளுல் வித்தை
மொளிதப்பா துலகினிலே நடந்தாயாளுல்
சத்தியருள் சகலசித்துங் கைக்குள் ளாகுஞ்
சத்தியந்தா னிந்தனூல் காண்ட முத்தே 300

நாலாங்காண்டம் மாந்திரிகம் முற்றும்.
குளந்தையானந்தா இரட்சிக்க

காலம்:

இல்லை

குறிப்பு:

இதில், இந்திரசால வித்தை, அட்டகுல பருவதம், மோடி வித்தை, மாடன் தியானம், ஆகாசமோடி, மாரணம், உடல்கட்டு மந்திரம், வாரி மோடி, பாவை மோடி, மாந்தரிய மகுத்திரள் உள்மூலம், மானம்பாடி, சதாசிவ தியானம், வக்கணுத்தி வித்தை, பிரம்ம தியானம், வல்லூத்தின் கரு, கருக்கு வித்தை, கஸ்தூரி பிள்ளை முதலியன உள்ளன.

இதன் பின்னர் வைத்தியம் எழுதிய இரண்டு ஏடுகள் சேர்க்கப்பட்டு உள்ளன.



வரிசை எண் : 1306 சுவடி எண் : 670

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 54. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது
பக்கத்திற்கு : 5-7 வரிகள். கி. எண்ணிக்கை : 750.
அளவு : 24 × 2½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர்: பலர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

**ராமதேவர் சூத்திரம்—பத்து**

*காணப்பா யேரியிலே விளைந்த பிண்டம்*
*கடிதான மாய......டெடுத்து வந்து*
*பூணப்பா பொற்காரம் பொறித்துக் கொண்டு*
*பூண்டத்தின் வாய்பிளந்து அதனுள் போட்டு*

**முடிவு:**

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனெடை | 4 |
| பூரம் | ,, | 2 |
| பொரிக்காரம் | ,, | 6 |
| வாளம் | ,, | 12 |
| சித்தாமணக்குப் பருப்பு | ,, | 4 |

பூனைக்காலி விளானில் பனங்கினங்கு சர்க்கரை பசுவின் நெய் நிரைத்து பசுவின் பாலில் குடிக்க யில்க்கை.

**காலம்:**

இல்லை

குறிப்பு:

இதில், 83 வரை ஏடுகள் இருப்பினும், இடையிடையே ஏடுகள் இல்லை. அதனால் தொடர்ச்சி இல்லை. முன்னதாக உள்ளதாக உள்ள இராமதேவர் சூத்திரம் 10ல் ஒரு ஏடு மட்டுமே உள்ளது. அடுத்து மந்திரங்கள் உள்ளன. பின்னர் வைத்தியம் இருக்கிறது.

இதில் பூவாலேயிரைக்க மந்திரம், மேகம் இருபதுக்கும் சூரணம், ஆனந்த வயிரவன், சன்னி பதினெட்டுக்கு, மூதண்டத் தயிலம், கெற்ப நோய்க் கெண்ணை, பிள்ளை பெற மாட்டாதவளுக்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 1307 சுவடி எண்: 671 (a)

# ரோமரிஷி சூத்திரம்-100

ஏடுகள்: 28 (48-75). ஏட்டின் நிலைமை: சிறிது பழுது.
பக்கத்திற்கு: 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : 18 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : ரோமரிஷி. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

மூலவட்ட மானகுரு பாதங் காப்பு
முத்திக்கும் வித்தான முதலே காப்பு
மேலவட்ட மானபர பிரம்மா காப்பு
வேதாந்தங் கடந்துநின்ற மெய்யே காப்பு
காலவட்டத் தங்கிமதி யமுர்தப் பாலைக்
கண்டுபசி யாத்திமனக் கவடு நீங்கி
ஞாலவட்டச் சித்தரொடு பெரியோர் பாதம்
நம்பினதால் **ரோமனெனப்** பேரு தானே

**முடிவு:**

உப்பல்லோ பிண்டத்திற் சேர்ந்த போதே
உடலுயிரு மொன்றாகித் தண்ணீ ராச்சு
அப்பல்லா முப்பூவுக் காணி யாணி
அதைவிட்டால் கட்டாது வழலை மார்க்கம்

செப்பவல்லோ பத்துக்கு மூட லாச்சு
நீச்சனமா யிந்தனூல்த் **தெளிவோ ரொம்ப**
முப்பொருளு மொன்ருகி நின்ற சோதி
மூலவட்டக் கருவாலென் மொழிதான் முற்றே 100.

சரஸ்வதி துணையாகவும்
விக்கினேசுபரன் துணையாகவும்
மகமாயி துணையாகவும் வேண்டியது.

**காலம்:**

1848–ம் வருஷம் மார்கழி மாதம் 3-ம் தேதி மாரிமுத்து அய்யா ரோமரிஷி சூஸ்த்திரம் வழலை மார்க்கம் நூறு எழுதி முகிந்தது முற்றும்.

ஆண்டவன் துணையாக வேண்டியது.

**குறிப்பு:**

**இதில், ரோமரிஷி பெயர்க்காரணம், சிங்கி வித்தை, தாம்புர கற்பம், சொற்ண பற்பம், வெள்ளி பற்பம், அயபற்பம், வங்க பற்பம், வெள் வங்கம், சிறுனகம், துத்தனகம், உப்பு, குருடன், திருடன், திரு பற்பம், அப்பிரகம், நிமிளை, சூத பற்பம், சாதிலிங்கம், பிடரி வலி, சிங்கனவ லோகம், துருசுக்குரு ஆயிளை, சவுச்சாரம், சாரம், காரம், துருசுச் சுன்னம், வழலை சவுக்காரம் முதலியன உள்ளன.**

---

வரிசை எண் : 1308 சுவடிஎண் : 671 (b)

# அகத்தியர் ரமணி மார்க்கம்

ஏடுகள் : (91-95) 5 ஏட்டின் நிலைமை : மிகப் பழுதுபட்டது. பக்கத்திற்கு: 8-9 வரிகள். கி. எண்ணிக்கை: 100. அளவு: 18 X 3 செ. மீட்டர். எழுத்து: தமிழ். ஆசிரியர்: அகத்தியர். முழுமை : முற்றும் உள்ளது.

**தொடக்கம்:**

ஆதியந்த மில்லாத சின்மயத்தின் பாதம்
அகண்டபரி பூரணமாம் ஆத்தாள் பாதம்

**தொடக்கம்:**

சோதிநிற மாகிநின்ற கணேசன் பாதம்
சொல்தனக்கு மெட்டாத சூட்சா சூட்சம்
விதியென்ற பராபரத்தில் நந்தி பாதம்
வேதாந்த சாத்திரத்தின் வெளியின் மார்க்கம்
சோதியெனும் பராபரத்தில் நடனஞ் செய்த
சுடரொளியின் பாதமது காப்புத் தானே.

**முடிவு:**

பார்க்கவே இம்முறையைச் சொன்னு யானுல்
பாளான நரகமெய்தும் பாரு பாரு
கார்க்கவே சீஷனுட மனதைக் கண்டு
கைமுறையாய்ச் சொல்லிவிடு ஞான மார்க்கம்
யேர்க்கவே ரசமணியின் மார்க்கந் தானும்
என்மக்காள் சொல்லிவிட்டேன் யேக மார்க்கம்
சேர்க்க(வே) இம்முறையை உனக்குச் சொன்னேன்
செழும்கருணை பதினுலின் கடாச்ச முற்றே.

குருபாத முன்னிற்கவும்
சிவமயம்

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், ரசமணி செய்முறை கூறப்பட்டுளது. நல்ல முறைகள் இதில் இடம் பெற்றுள்ளன.

---

**வரிசை எண் : 1309** **சுவடி எண் : 671 (c)**

# கடைப்பிள்ளை யோக சூத்திரம்

ஏடுகள் : 12 (7-19) ஏட்டின் நிலைமை : மிக மிகப் பழுது. பக்கத்திற்கு: 7-8 வரிகள். கி. எண்ணிக்கை: 200. அளவு : 18 × 3 செ. மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : கடைப்பிள்ளை. முழுமை : முற்றும் உளது.

தொடக்கம்:

ஆதியென்ற சுழிமுனையைத் தியானம் பண்ணி
அதன்பிறகு அரினமோ நன்றாக வென்று
நீதியுடன் குருவாழ்க வென்றே சொல்லி
நிரஞ்சனமாஞ் சற்குருவைத் துணையென் றேதான்
சோதியென்ற கமலமடா அண்டத் தாதி
துலங்குகின்ற தீபமதைத் தியானம் பண்ணி
ஓதியதோர் மந்திரத்துக் குயிராய் நின்ற
ஓம்நமோ கணபதிதன் பாதம் காப்பே.

முடிவு:

பண்ணப்பா பூசைவிதி நன்றாய்ப் பாரு
பத்திகொண்டு தீட்சையதில் பதிவாய் நில்லு
நண்ணப்பா பச்சணியை உ(ற்)றுப் பாரு
நடுவான தண்டக்கம் நாட்டிப் பாரு
விண்ணப்பா தானோக்கி ஞானம் பாரு
மெய்யான அமுற்தபோ தகத்தைப் பாரு
முண்ணப்பா கண்ணொளிபோ லொன்றே சூட்சம்
முத்தியே கடாட்சம்பூ ரணந்தான் முற்றே. 37

சிவமயம்.

முற்றும்.

குருவே துணையாக வேணும்.

காலம்:

இல்லை

குறிப்பு:

இது,யோக மார்க்கத்தைப் பற்றிக் கூறுகிறது. சற்று எளிமையாகவும் கூறுகின்றது.

---

வரிசை எண் : 1310 சுவடிஎண் : 672

# அகத்தியர் வாத சூத்திரம்

ஏடுகள்: 44(50-93). ஏட்டின் நிலைமை: மிகமிகப் பழுது. பக்கத்திற்கு : 10-13 வரிகள். கி. எண்ணிக்கை : 2000. அளவு : 25 X 4½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

......பழச்சாருங் கூட்டி......
மிண்ட சட்டியில் வார்க்......
.................சாமம்
மாண்டுமடா வலியுமடாக் கட்டிப் போச்சு.

**முடிவு:**

**வெண்பா**

காப்பேது வாதங் கடந்த குரைபாடத்
தாப்பேது சா....சாத்தவே—மாப்பேது
வாதஜால முன்னூறும் வகாரத் துரைசறிதாள்
வேதமே சொல்லி விளம்பு. 299

தெட்சணமூர்த்தியுடைய பெருநூல் சாலத்தில்
வகார முற்றும்.

ஆக காண்டம் ரெண்டுக்கு 599

சரசோதி நம.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், துத்தக்கட்டு, பூவெடுக்க, கருவங்கம், கரியுப்பு, சக்திவிந்து, சிவவிந்து, கருவிழிக்கு நெய், வெண்காரக்கட்டு, நவச்சாரக்கட்டு, சீனக்கர் செந்தூரம், ஐவிரலிச்சாறு ...... சாதிலிங்க மெழுகு, கெந்தகச் செம்பு, ஞதவித்தை முதலியன உள்ளன.

கடைசி ஏட்டில் இதனைத் தொடர்ந்து வைத்தியம் எழுதப்பட்டு உள்ளது.

---

வரிசை எண்: 1311 சுவடி எண்: 673(a)

# (அகத்தியர்) வாதகாண்டம் 2-ங் காண்டம்-300

ஏடுகள்: 65. ஏட்டின் நிலைமை: மிக மிகப் பழுது.
பக்கத்திற்கு: 6-8 வரிகள். கி. எண்ணிக்கை: 2000.
அளவு: 30 × 3 சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர். முழுமை: முற்றுமுளது.

தொடக்கம்:

நாகரசம்

காண்டமென்ன நாகரசம் சொல்லக் கேளு
கடியகோ டகசாலை கொடிப்பை வீளி
பூண்டகொடு வேலிசா ரணையின் சாறு
அப்பனே செருப்படிச் சாறுங் கூட்டி
மீண்டசட் டியில்வார்த்து ஞகம் வாங்கி
விளம்பியசா ருடன்கலந்து யெரிப்பாய் சாம
மாண்டுவிடும் வலியுமடா கட்டிப் போச்சு
வாதமென்ன யிம்மருந்தை மாட்டு மாரி. 1

முடிவு:

காப்பே(து வாதங் கட)ந்த குரைபாடத்
தாப்பேது சாலத்தைச் சாற்றவே—மாப்பேது
வாதனூல் முன்(னூறு) வகாரத் துரைசமிதான்
வேதமே சொல்லி விளம்பும். 299

வாதகாண்டம் முகிந்தது முற்றும்.
தெட்சனுயன் பாதமே கெதி
முகிந்தது, முற்றும்.

காலம்:

இல்லை

குறிப்பு:

இது, முன் சுவடி போன்றது. இதில் முதற்காண்டம் இன்மையால் அகத்தியர் என்ற பெயர் காணப்படவில்லை.

இதில், வங்க செந்தூரம், சவுக்காரம், எண்ணெய்வாங்க, கரியுப்புக் கட்டு, அறுவகை களங்கம், வெள்வங்க ரசிதம், அப்பிரகம், லோகம் மனவிரம், கிண்ணவகை, ரசசுத்தி, அட்டைபதம், புளி நடலைக்கிழங்கின் வேதை முதலியன உள்ளன.

இதன் தொடக்கத்தில் அட்டவணை எழுதிய ஏடுகள் 2 உள்ளன.

வரிசை எண் : 1312 சுவடி எண் : 673 (b)

# (அகத்தியர்) வாத காண்டம் 3-ம் காண்டம்

ஏடுகள் : 84. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 7-9 வரிகள். கி. எண்ணிக்கை : 2800.
அளவு : 30×3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

முன்னுரைத்த . . . .வழிமுத்த கிழக்கு மாந்திரிய
மின்னுரைத்த திங்கள் முட்டும் வேணியாய் — பண்ணுரைத்த
குஞ்சரமே மூல . . . .
கஞ்சமலர்ச் சேவடியே காப்பு.

**முடிவு:**

வாழ்த்திப்பா ரோடுவகை சொல்வராயே
காமடையணி றக்கமில்லா நிடுபருண்டு
னூல் கொடுத்தால் போகாப் பாவம்
மெத்தவரும் பொருளை யீலாசத்த ருண்டோ.
. . . . . . . . . . . . . . . 617

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், இடையிடையே ஏடுகள் இல்லை. கடைசியில் முற்றற்றது தெரிகின்றது. இதில் 300 பாடல்களே இருக்கவேண்டும். இதில் 616 செய்யுட்கள் இருக்கின்றன.

இதில், முத்து பற்பம், வாசிக் குறி தப்பினபேர், கள்ளஞானி, உப்பின் பற்பம், பாண்ட கர்ப்பூரம், சூரணம், குப்பி வைப்பு, சவ்வீரம், சடாதாரச் செந்தூரம், பஞ்சகவ்விய லேகியம், நோய் வரலாறு, மேகராசாங்கத் தயிலம் முதலியன உள்ளன.

———※———

வரிசை எண் : 1313 சுவடி எண் : 673 (C)

# (அகத்தியர்) வாத காண்டம் 4-ங் காண்டம்

ஏடுகள்: 18(72—89). ஏட்டின் நிலைமை: சிறிது பழுது. பக்கத்திற்கு : 4-7 வரிகள். அளவு : 30 × 3 செ. மீ. கி .எண்ணிக்கை: 1500. எழுத்து: தமிழ். ஆசிரியர்: (அகத்தியர்). முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

(முதல் ஆறு பாடல்கள் இல்லை. தலைப்பு இல்லை)

...............படி பூத வீடு
கண்டிடுவாய் சதிரத்தில் மட்டு மப்பா
கருவான நால்மூலை பூதம் வேண்டாம்
உண்டான வகாரத்தில் வட்ட முத்து
உரவான வகாரத்தி லாறு போடு
மிண்டாத் திரிகோணஞ் சிகாரந் தானும்
விஷ்ணுவின் பிரைமகாரம் நகாரம் நாலே. 7

**முடிவு:**

கருதிக் காரதைகதிப் பார்வை யத்து
சுருதிப் பொருளது சூட்சஞ் சொல்லாதே
மரிமரியெ..............
.................... 143

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், தொடக்கமும் முடிவும் இல்லை.

இதில், லெக்கம் அன்பத்தொன்று, தூளிவித்தை, யெடுத்தாடும் பாவை, பாம்புவாய்த் தேரை, பல்லிவாய் நூல்பூச்சி, பூனைவாய்எலி, மயில்வாயில் சர்ப்பம், கீரிவாய்சர்ப்பம், மணியன்வாய்ச்சர்ப்பம், ஆந்தை வாய்ச் சர்ப்பம், ரசமணி, வல்லூரு வாய்க்கொக்கு, கரும் பிராந்து, சாவல் வித்தை, அஷ்ட்ட வயிரவம் முதலியன உள்ளன.

இதன் பின்னர் 6 உதிரி ஏடுகள் உள்ளன. இதில் இரும்பியம், துத்தநாகம், லிங்கமெழுகு, காரீயம், ரசபதங்கம் காந்த செந்தூரம், முதலியன உள்ளன.



வரிசை எண் : 1314 சுவடி எண்: 673 (d)

## அகத்தியர் வைத்தியர்—80

ஏடுகள் : 2. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது
பக்கத்திற்கு : 7 வரிகள். கி. எண்ணிக்கை : 60.
அளவு : 30 × 3 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர்: (அகத்தியர்). முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

அரன்கயிலை விட்டுநான் தட்சிணத்தில் வந்து
அளவரந்தகோடி சித்தர்முனிவர் ரிஷிகளு மாயி
பரந்ததொரு பொதிகைதனி லிருக்கும் போது
பாடினனூல் வாதமொடு வயித்தி யந்தான்

**முடிவு:**

ஆகுமநால் காமமுந்தான் அலர்அங் கெரித்து
ஆத்தாளைப் பூசித்து அடுப்பைவிட் டிரக்கி
பாகுபோற் முப்பூவின் குருவினுட மார்க்கம்
வய்யகத்தில் வய்ப்பரிவார் கோடிக் கொண்டு
தாகுபேர் பெருநூலுஞ் சாஸ்த்திரமுஞ் சொன்னேம்
தவறுது குருவழலை சூட்சயிந்த நூலே.
குருவாக யென்பதுமே............

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இது, சிறந்த நூலாகும். இதில் நல்ல பல வைத்தியங்கள் உள்ளன. இதில், பத்து பாடல்கள் முழுமையாக உள்ளன.

வரிசை எண் : 1315 சுவடி எண்: 674 (a)

## குணவாகடர்

ஏடுகள் : 20. ஏட்டின் நிலைமை : மிகப்பழுது.
பக்கத்திற்கு : 7—9 வரிகள். கி. எண்ணிக்கை : 800.
அளவு : 38 × 3½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

(தொடக்கம் இல்லை)

சுபோலக்கண வெத்து பாதுங்குமயாதே
அலத்தும் துஞ்சாதிர அம்பகத்துந்தாள்
சுருங்கிப் பாண்டம் மிகவேர்க்கில்
செஞ்சொல் கிள்ளைமொழி மாதே செப்பாய்.

**முடிவு:**

யேங்கிய காலிருந்து ருமாகாசம்
பொங்கிய வஞ்சுக்குள் பொல்லாது மூன்றுந்நான்
தங்கிய வாயு சமத்தன் மகாவாதம்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், தலைப்பு ஏடு இல்லாததால் இன்னதென்றறிய முடியவில்லை. இதன் தொடர் ஏடுகள் பின்னரும் உள்ளன. ஏட்டெண் இல்லாததால் தொடர் காண இயலவில்லை.

இதில், நீரிபுள்ளுதோஷம், வரபுள்ளுதோஷம், பட்சிகுணம், குளிதோஷம், நீலக்குளி தோஷம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1316 சுவடி எண் : 674 (b)

## அகத்தியர் வைத்தியம்–205

ஏடுகள் : 16. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 8 வரிகள். கி. எண்ணிக்கை : 500.

அளவு : 38 × 3½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுற்றது.

**தொடக்கம்:**

பூரணமாம் மம்மூலம் யோனியிற் சூடாம்
புகையெழும்பி மேகமதாம் சிரசில் சூடாம்
காரணமாம் நீர்கலந்து கண்ணில் ரோகம்
கனலெழுந்து வாய்வுஞல்ச் சூலை ரோகம்.

**முடிவு:**

நிகரில்லா மேகத்தின் தைலம் கேளு
நிசமான சந்தணமி லாமிச் சோடு
வகையான ஆவாரையின் பட்டை யோடு
வகைபத்து பலமாக வாங்கி யேதான்
பிசகாமல் தூணிநீர் யெட்டொன் ருக்கி
பெருமையென்ற கசாயத்தை வாங்கி யேதான்
நகையாமல் நல்லெண்ணெய் ஞழி விட்டு
நறுணிண்டி வேர்பலந்தான் சேத்துப் போடே. 106

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

ஏடுகள் இடையிடையே இல்லை. தொடர்ச்சி சரியில்லை.

இதன் பின்னர், உதிரி ஏடுகளாக 41 உள்ளன. இவற்றில் பக்க எண்கள் இன்மையின் தொடர்புபடுத்த இயலவில்லை.

இது, எமது சுவடி எண் 311(e)/D.566, 323(a)/D. 622 போன்றது.

---

வரிசை எண் : 1317. சுவடி எண் : 675 (a)

## அகத்தியர் 1200-ல் சூத்திரம்-12

ஏடுகள்: 31 (8—[illegible]), ஏட்டின் நிலைமை: மிகப்பழுது.
பக்கத்திற்கு : 7—8 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
அளவு : 26 × 3½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றும்.

தொடக்கம் :

காரமென்றால் பல்லியுட கல்லோ காரங்
 காரத்தில் கடுங்கார மேர வென்றால்
சாரமது பூனைக மெடுத்து வந்து
 சாதகமாய் சிலத்தாலே ஏழு சுத்தி
வாரமுடன் சிறுநீரா லேழு சுத்தி
 மகிழத்தான் வஷ்த்துவி லேழு சுத்தி
சீரான தேசி யமுரி நீரில்
 சிறப்பாக ஏழுசுத்தி செய்து பாரே.

முடிவு :

செந்தூரங் குடுப்பதற்கு வகையைக் கேளு
 செயப்பெடுத்த வீரமொடு ஆரங் கூட்டி
மருந்துமாம்ஞ் சரக்குரெண்டு பொடித்துக் கூட
 அப்பனே கூடவிட்டுக் கலந்து கொண்டு
தந்தரமாயி வெள்ளெக்கொன்று ஒருமாப் போடு
 தாரணியில் பதினாறு வயது பிள்ளை
நந்துலவு மாத்தாளே பூசித் தாக்கால்
 நாட்டுவாள் வேதெயிட்டு நடத்திப் பாரே. 12

தேவி சகாயம்
முற்றும்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 186 (e)/d. 298 சுருக்கம் பனிரண்டு போன்றது.



வரிசை எண் : 1318. சுவடி எண் : 675 (b)

# சட்டைமுனி ஐயா நிகண்டு

ஏடுகள்: 7½ (6—13). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
பக்கத்திற்கு : 8—9 வரிகள். கி. எண்ணிக்கை : 200.

அளவு : 26 × $3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : சட்டைமுனி ஐயா. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

சோதியெனுந் துரியவெளிக் குருவே அய்யா
சொற்பெரிய கயிலாச மயமே ஞானம்
தாதியே கடவுளே ஞான மார்க்கம்
அந்தரத்தே யென்றுரைத்தால் ஆர்தான் காண்பார்
வாதியென்று பேர்கொண்ட சுந்தரமே அய்யா
வரிசையுடன் யுவர்ச்சாரம் வழலை மாற்கம்
நீதியாய்ச் சொல்லுகிறேன் நினவாய்க் கேளு
நிகண்டுபன் னிரண்டுநூறு நிலைத்திட் டேனே. 1

**முடிவு :**

ஆமப்பா சுந்தரமே அய்யா கேளு
அண்டத்தின் சுன்னமொடு வாசி மூலம்
நாமப்பா நிகண்டுபன் னிரண்டு நூறும்
ஞட்டினேன் சூத்திரம்போல சோடச மாடி
வாமப்பா ரண்டுகாண்டம் வாதத் துக்கு
மகத்தான சூத்திரமிரு நூறுஞ் சொன்னேன்
காமப்பா சூஷ்த்திரமும் நிகண்டு சோடஷ
சாத்திரமும் பார்த்தவர்க்கே முத்தி யாமே. 53

சட்டமுனி அய்யா சொற்
சூத்திரம் முகிந்தது
முற்றும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 342 (c)/d. 670, 341/d. 673-ன் வேருயது இதில், நிகண்டு பன்னிரண்டு நூறு என்று முதலிலும் கடைசியிலும் கூறப்பட்டுள்ளது. ஆனால் 53 செய்யுட்களே உள்ளன.

---

வரிசை எண் : 1319. சுவடி எண் : 675 (C)

# மச்சமுனி நிகண்டு-105

ஏடுகள்: 12(14—25). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது. பக்கத்திற்கு : 8—9 வரிகள். கி. எண்ணிக்கை : 300. அளவு : 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : மச்சமுனியார். முழுமை : குறைபாடுடையது.

**தொடக்கம் :**

ஒருவ னொருத்தி ஒண்ணிற்று லொன்றுச்சு
இருவ ரிருந்திட மீரேழு லோகமாங்
கருவுங் குருவுங் கைவண்ண மானதா
லிருவரி லொருவ ரேகாந்த மாச்சே. 8

**முடிவு :**

ஓதிடறி வாலே யுள்ளஞ் செழுத்தையும்
ஆதியு மந்தமு மாம்நடுப் பூரணஞ்
சோதிய ஞதந் துரிய மிருந்திடம்
நீதியு மின்ன நிகழ்றிடு முற்றியே. 105

குருபாதமே கெதியாகவும்
மீனாட்சி துணை

மச்சமுனி 105 நிகண்டு எழுதி முகிந்தது முத்தும்
மனோன்மணி முன்னிற்க வேணும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், முதல் 7 பாட்டல்கள் இல்லை. இதில் வாசசந்தி, பஞ்சாட்சர மகிமை, அதன் விளக்கம் முதலியன கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 1320. சுவடி எண் : 675 (d)

# இராமதேவர் வைத்தியம்-81

ஏடுகள்: 20(26—45). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
பக்கத்திற்கு : 9—10 வரிகள். கி. எண்ணிக்கை : 600.
அளவு : 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : இராமதேவர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

ஆதியிலே யமைந்தவிதி யெழுத்தைக் காண
அருளான நந்திபதம் அன்பாய்க் கொண்டு
சோதியென நின்றிலங்கும் நாத ரூபி
சுருதியுள்ள வாலைமனோன் மணியைப் போத்தி
நீதியுடன் சஞ்சாரச் சமாதி செய்து
நின்றனடா ஆதியந்த நிலைக்க வேதான்
வாதியென்றே வந்தோர்க்குக் குருவா மின்னூல்
வாசணித்தே னெண்பதுமே யொன்று மாச்சே. 1

**முடிவு :**

வணக்கமுள்ள யின்னூலை வெளிவி டாதே
வஞ்சருடன் பேசாதே வா(யா) டாதே
பிணக்கமில்லா மைந்தருட னிணங்க வேண்டாம்
யின்பமுள்ள வயித்தியனா லீய வேண்டாம்
மணக்குமலர் மதிதனிலே மனத்தை வைத்து
வயித்திய மெண்பதுவும் வகையாய்ப் பார்த்து
தனக்குமிகப் பொருளெனவே வணங்கிப் போற்றிச்
சதாகாலம் பூரணத்தில் சார்வாய் முற்றே 82

குருவே நமா
மீனாட்சி துணை
ஸ்ரீராம ஜெயம்
குருபாதந் துணையாகவும் வேணும்
நன்றாக.

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில் துருசுகுரு, அஞ்சனம் பாஷாணக்கட்டு, பூரணலேகியம் செம்பு சுத்தி முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1321. சுவடி எண் : 675 (e)

# சொரூபானந்தர் ஆனந்தக் களிப்பு

ஏடுகள்: 10 (46—55). ஏட்டின் நிலைமை: மிகப்பழுது.
பக்கத்திற்கு : 9—10 வரிகள். கி. எண்ணிக்கை : 250.
அளவு : 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : சொரூபானந்தர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

**ஆனந்தக் களிப்பு**

அந்திக்கு முன்வந்தா னோடே
அதிகால மெய்யனை யன்பாகக் கண்டு
சந்தித்து வையகந் தாங்கி—நாதந்
தாங்கிய பொதி....தன்னுடல் பொதிந்து
விந்துதன் பதியினிற் கூட்டி
அப்புமேல் நின்ற தீபத்தை மேவாதய்யோ.

**முடிவு :**

பிந்திய பத்தடி யோடே—கூடப்
பேசிடுந் தேவியின் தீட்சைய தாகுந்
சந்தத மோங்காரங் கூடி—யெங்குந்
தானாயி ருந்திடுஞ் சத்தியின் தீட்சை
வந்தகொடி றேகமுஞ் சித்தி
கற்பமும் யோகமும் சித்தியாந் தெளி. 50

முஷ்த்தும்
குருவே துணை
குமரன் துணை.

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது தத்துவத்தை உள்ளடக்கிக் கூறுவது.

---

வரிசை எண் : 1322. சுவடி எண் : 675 (f)

# பதஞ்சலி வியாக்கிரபாத மா படலம்

ஏடுகள்: 1½ (56—57). ஏட்டின் நிலைமை: மிகப்பழுது. பக்கத்திற்கு : 10 வரிகள். கி. எண்ணிக்கை : 50. அளவு : 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : பதஞ்சலி, வியாக்கிரபாதர். முழுமை : முற்று முளது.

தொடக்கம் :

அபேதனம்

ஆதியென்றும் பதஞ்சலியார் குளிகை மார்க்கம்
அட்டவித மெடுத்துரைத்த அருமை கேளு
சோதியாந் துருவமதாம் விண்ணில் கேளு
சுந்தரனும் தலையீற்று மைந்த னோடு
பேதியென்ற திங்களது ஏழுக் குள்ளே
பிசகாம லாக்கினையாம் களத்தில் வாங்கி
வேதியென்ற உச்சியிலே தமரைப் போட்டு
விடுமதிலே சூதமதுவிராக னஞ்சு தானே. 1

முடிவு :

பண்ணியே யிக்குளிகை செந்தூரமாய்
பரிவாக தினங்குன்றி உண்ணு உண்ணு
விண்ணிலே மண்டலந்தான் உண்டு பாரு
விரியமடா காயசித்தி விள்ளப் போகா
உண்ணியே வலசலமும் வேதை யாகும்
ஒருகோடி தாம்பூர ரசித மாமே
நண்ணியே சாமாது. குளிர்ந்து கொள்ளு
நாதந் தானே. 8

முஷ்த்தும்
குமரன் துணே.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், பதஞ்சலி மாமுனியின் குளிகை செய்யும் முறை, அதன் குணம், பலன் முதலியன கூறப்பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1323. சுவடி எண் : 675 (g)

## சிதம்பர விதி-24

ஏடுகள்: $3\frac{1}{2}$ (57—60). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
பக்கத்திற்கு : 9—10 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
அளவு : 26 × $3\frac{1}{2}$ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

சின்மயமே அகண்டவெளி மானு தீதச்
சிற்பரையே சற்குணமே தேவா தேவே
(க)ன்மமொடு யோகவிதி நாலுஞ் சொல்லக்
கருணையுடன் சிதம்பரத்தை விரித்துச் சொல்வேன்
தன்மயமாங் குமாரனொடு வீர வாகு
தந்திமுகன் வயிரவனுந் துற்கை யோடு
நன்மைதரு சரசுபதி பூமக ளோடாய்
நந்திமுகன் யென்னுளுங் காப்ப தாமே. 1

**முடிவு :**

நம்மந் திரந்தரு தம்பன மோகனம் நான்மரையே
மம்மந் திரந்தரு மாரணம் பேதனம் வாகு
யம்மந் திரந்தரு மிரலோக பரலோக வித்துவே ஷணமே. 24

சிதம்பர விதி முத்தும்
அகத்தீசர் கிடாச்ச முண்டாம்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இது யோக மார்க்கத்தைக் கூறுவதோடு, தம்பனம், மோகனம், மாரணம், பேதனம், வித்துவேஷணம் முதலானவற்றையும் கூறுகின்றது.

---

**வரிசை எண் :** 1324 சுவடி எண் : 675 (h)

# சிவசுந்தரானந்தர் பாடல்-16

**ஏடுகள்:** 4 (61-64). ஏட்டின் நிலைமை: மிகப்பழுது.
**பக்கத்திற்கு :** 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
**அளவு :** 26 X 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** சிவசுந்தரானந்தர். முழுமை : முற்றும் உளது.

**தொடக்கம்:**

குளிருக்கு

ஆதிமிக நிறைசட்டை ஞதாக்கள்
பின்சே யென்றே பிள்ளெயாக்
கோதி யந்தத் துள்ளி ருக்கும்
சுடரைப் போற்றி சுந்தரமென்ற

**முடிவு:**

ஆமப்பா நவலோகம் பழுக்கும் பத்தாய்
அப்பனே அல்லாட்டால் மலையி லேறு
போமப்பா கற்பத்தைக் கொண்டு தானே
புகழ்பெறவே சாகாம லிருந்து கொண்டு
ஞமப்பா சிவனடியைப் போத்திக் கொண்டு
ஞதாந்த சட்டமுனி மகனே யென்று
ஓமப்பா வந்தோர்க ளினக்குத் தம்பி
யென்றேனு னளைத்திடுவேன் சித்த ராமே. 16

குமரன் துணை.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில் மருந்துமுறை கூறப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : 1325 சுவடி எண் : **675 (i)**

# அகத்தியர் வைத்தியம் சூத்திர-திருநீலகண்டம்

ஏடுகள் : 3 (65–67). ஏட்டின் நிலைமை : **மிகப் பழுது.**
பக்கத்திற்கு : 9 வரிகள். கி. எண்ணிக்கை : **75.**
அளவு : 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : **தமிழ்.**
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

நாடியதோ ரகண்டபரி பூரணமாய் நின்ற
நகாரமுத்து கிணேசனொடு கந்தன் காப்பு
ஆடியதோர் சிவனாரும் மென்னைப் பெற்ற
ஆத்தாளும் ஞவுதனில் லகும்கொண் டேதான்
பாடியதோர் வயித்தியம்அன் பதுந்தான் சொல்வேன்
பண்பான புலத்தியனே யின்னூ லோடே
தேடியதோர் பூரணசூஷ்த் திரத்தில் நன்றாய்த்
தீட்சையொடு கருக்குருவுந் திரஞ்சொன் னேனே. 1

**முடிவு:**

கேளப்பா மருதோணி நாக வல்லி
கெந்தகத்தோ டெருக்கம்வேர் வச்சிர வல்லி
சூளப்பா கரியசீ ரகமு மேலஞ்
சூடனொடு சிறுநீரா லாட்டி மைப்போல்
வாளப்பா முன்சொன்ன செந்தூரம் போட்டு
வளர்ந்தபட தாமரையும் தழுதா ளையுஞ்சூலை
தேளப்பா சிலவிஷங்கள் சிரங்கு குஷ்ட்டம்
தீருமே சாயங்காலம் தீர்த்த மாடே. 9

ஆடவே யின்னமொரு சூச்சங் கேளு
அரிதாரம் வேண்டியதோர் ......

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், செந்தூரம், குளிகை, பற்பம், தயிலங்கள், கிஷாயங்கள் முதலியன பேசப்படுகின்றன.

---

**வரிசை எண் :** 1326 சுவடி எண்: 675 (j)

# கருவூரார் சூத்திரம்-100 (115)

**ஏடுகள்:** 25(68-92). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
**பக்கத்திற்கு :** 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 800.
**அளவு :** 26 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர்:** கருவூரார். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

**இரும்பிலீயம்**

சீர்பெரு வேதாந்த சூத்தி ரத்தை
தெட்சணு மூர்த்திபாதந் தெளிந்து போற்றி
கார்பெரு மாயியுட பாதம் போற்றி
கயிலாச திருமூலர் பாதம் போற்றி
யேர்பெருகு சட்டைமுனி போக ருதர்
பேரின்ப கோரக்கர் பதஞ்சலியு மிக்க
யேர்பெருகு நாதாக்கள் பாதம் போற்றி
யிகல்வான அருள்பொருளா மிந்த நூலே. 1

**முடிவு:**

பலித்திடவே தாம்பிரத்தின் சுத்தி கேளு
பண்பாகத் தாம்பிரத்தைக் குகைக்குள் வைத்து
பொலிந்திடவே அண்டத்தோல் தூளை யிட்டு
புரளவே செ....தூவித் தூவி
வலித்திடவே பொடிசேர யிட்ட பின்பு
உத்தமனே வீரமது களஞ்சி போட்டு
கெலித்திடவே அண்டத்தோல் மறுபடியும் விட்டு
கிருபையுடன் உருக்கி நன்றாய் வாங்கு வாங்கே. 115

நிமுத்தி பலக்குபடா சூத்திரந்தான் முற்றே.
கருவூரார் சூத்திரம் முற்றும். வேறு
குருபாதமே கெதி.

**காலம்:**

இல்லை

**முடிவு:**

இதன் முதலில் 'வாக்குண்டம்' எழுதிய ஏடொன்றுளது. இதில் இரும்பீயம், சாரக்கட்டு, அயச்செம்பு, கிண்ணி, களங்கம், ரசமணி, அஞ்சனம், மைவகை, காந்தம், செந்தூரம், தாளகம், செந்தூரம், இரும்பிலீயம், ரசக்கட்டு, அயத்திலீயம், இரும்பு செம்பு, சூதபற்பம், சூதக்கட்டு செந்தூரம், முதலியன உள்ளன.



வரிசை எண் : 1327 சுவடி எண்: **676 (ஆ)**

# காலாங்கியார் தேவி பூசாவிதி

ஏடுகள் : 23. ஏட்டின் நிலைமை : **மிகமிகப் பழுது.**
பக்கத்திற்கு : 5—6 வரிகள். கி. எண்ணிக்கை : **600.**
அளவு : $23\frac{1}{2} \times 2\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : **தமிழ்.**
ஆசிரியர் : காலாங்கி முனிவர். முழுமை : **முற்றற்றது.**

**தொடக்கம்:**

ஓமென்ற கணபதியும் வல்லபையுங் காப்பு
ஓங்காரக் கம்பநுணி சோதி காப்பு
ஆமென்றும் ஊமென்றும் அடங்கி நின்ற
ஆதியந்த மெய்நிறைந்த பராபரமே காப்பு.

**முடிவு:**

சேறப்பா நாதமதில் அமறி உப்பு
சேர்ந்திடவே நாதமங்கே தெளியும் யாரு
ஆறப்பா அறிவார்கள் தெளிவைக் காணார்
அத்தெளிவை அறியாமல் உலகத் துள்ளே
பாறப்பா நாதமதை வாங்கி மைந்தா
பாசமதை அகத்தாமல் பாவிமார்கள்
நே. . . . . . . . . . . . . . 52

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

முதல் முகப்பு ஏட்டில் ''வேணியான் சதாசிவத்தில்'' எனத் தொடங்கும் செய்யுட்கள் 2 எழுதப்பட்டுள்ளன.

இதில், காலாங்கியார் அஷ்டகர்மம், வித்துவேஷணம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1328. சுவடி எண் : 676 (b)

# அகத்தியர் வைத்தியம்-80

ஏடுகள் : 15. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 5—6 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : $23\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

சீரணி கொன்றை சூடும்
சிவனிரு பாதம் போற்றி
வாரண முகத்தோன் பாதம்
வணங்கிநூற் றன்ப துந்தான்
பூரணி வாலை ஞான
சரசுவதி பாதம் போற்றி
காரண மான செஞ்சொற்
கற்மசூஸ்த் திறந்தான் காப்பே. 1

**முடிவு:**

மெய்யடா நயவசிம மோகனம தாகும்
(விள்)ளாதே பேதனமாம், நயவசிம வென்று
நய்யவே வயநமசி வித்துவே ஷிக்கும்
நாடாதே மாரணத்தின் மசிவயந வென்றே. (85)

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, எமது சுவடி எண் 324 (b)/D. 637 அகத்தியர் வைத்தியம் 150 போன்றது. ஆனால் இது, அகத்தியர் வைத்தியம் 80 எனக் கொண்டு உள்ளது.

இதில் 'நீலகண்டம்' என்ற தலைப்பு மட்டும் உள்ளது. இதில் பஞ்சாட்சர விளக்கம் அஷ்ட்டகர்மத்திற்கும் கூறப்படுகிறது சிறப்பு.

---

வரிசை எண் : 1329. சுவடி எண் : 677

# வைத்தியம்

ஏடுகள்: 25. ஏட்டின் நிலைமை: மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 5—6 வரிகள். கி. எண்ணிக்கை : 350.
அளவு : $23\frac{1}{2} \times 2$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

கடிக்கொல்லும் வறசமந் தானுற்பத்தி
தானும் வந்திடும் வறுமை....
மகலும் தான் நிறவா மூடற் சமைத்த
பின்தானும் தானே. 5

**முடிவு :**

ஓமம் சாதிக்காய் கிராம்பிஞேடு தோ....
குரோசாணி பலமே தூக்கி
காணவே பொடி.....போகுதன்னில் 131
பாகுநிலந்....நெயி நாழி....

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, மிகவும் செல்லரித்துள்ளதாலும் தொடக்கம் முடிவு இல்லாததாலும் இதுபற்றி குறிப்பெழுத இயலவில்லை.

---

வரிசை எண் : 1330. சுவடி எண் : 678 (a)

# கும்பமுனி-1200

ஏடுகள்: 20. ஏட்டின் நிலைமை: மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 9—10 வரிகள். கி. எண்ணிக்கை : 600.
அளவு : 25 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : கும்பமுனி. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

(பிள்ளை)யா ரெழுத்தென்றும் சுளிமீ தென்றும்
பேர்பெரிய நாதாக்கள்....யென்றும்
(வெள்)ளையா யிருந்துவெட்ட வெளிதா னென்றும்
மலரடி மலரென்றும் தாய்தா னென்றும்
துள்ளுபரஞ் சோதியென்று மதியீ தென்றும்
மயங்கியபூ ரணமென்று மருந்தீ தென்றும்
உள்ளதா யெங்கெங்கு நிறைந்த தென்றும்
உதித்தறீங் காரமுத லெழுத்தீ தென்னே. 1

**முடிவு :**

தானென்ற ஆணுவத்தைத் தீத்துப் போடு
சங்கற்ப விகற்பமெல்லாந் தானே தள்ளு
கோனென்ற தத்துவத்தைக் குறித்துப் பாரு
கூசாமல் மவுனத்தில் குவிந்தே நில்லு
கானென்ற ஞானத்தீ மூட்டிப் பாரு
கனத்தநல முள்ளதொரு ராசி சேரு
வானென்ற வொளிவெளியைக் கண்டு தேறு
மாச்சற்ற குருபதத்தில் வணங்கி நில்லே. 104

முற்றும்.

**காலம் :**

யுவ வருடம் சித்திரை மாதம் 23-ந் தேதி சுப்பிரமணிய வாத்தியார் குமரன் எழுதி நிறைந்தது.

குருசாமி சகாயம்.

**குறிப்பு:**

இதில், பாடல்கள் 104 உள்ளன. இதில் சிவதீட்சை, கருமானம் மறைப்பு மை, அஞ்சன மை, புவனைத் தயிலம், வஸ்த்து வித்தை, ஸ்ரீவசியம், தம்பனக் குளிகை, அருணகுளிகை, அஞ்சனக் குளிகை. இந்திரஜாலக் குளிகை, கவனக் குளிகை, சவுக்காரச் சுன்னம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1331. சுவடி எண் : 678 (b)

# இந்திரசாலம் 3-ம் காண்டம் கக்கிசப் படலம்

ஏடுகள்: 29. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 12—13 வரிகள். கி. எண்ணிக்கை : 1200.
அளவு : 25 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக் கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

காரணமெய்ஞ் ஞானவெளி கடந்து நின்ற
கற்பகமே விற்பனமே கருணை மேவு
பூரணமே பஞ்சகர்த்தா ரூபி யான
புண்ணியமே நிண்ணயமே பொருளே வேத

**முடிவு :**

பாடியபோ தவரவரே தெரிந்து நாத்த
பரிபாஷை யரிந்துரைத்த பராபரத்துக் கோநீ
தேடியநூ லிதுமட்டு முனக்குப் போதும்
தேவையில்லை மற்றநூல்த் தொடவே வேண்டாம்
மோடிசெய்ய வகையினிமேல் மாந்த ரீகம்
முன்னூறு கடசியிலே நாலா.. 301

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில் ரசகுளிகை, நாமகள் பூமகள் கிணேசன் பூசை, சிதம்பர பூசை, மேரு பூசை, ஏகாட்சரம், மோடிச்சந்தா பூச்சணி, அட்டதுர்க்கை,

அட்ட மூலி, பச்சனிக் கரு, உச்சாடினம், துவாலேயெடுக்க, வாடை, மரங்கொத்திக்காடை, கெருடன்கடு, கருங்குரங்கு, சுணங்கு, பச்சணி, தண்டகம், முதலியன் உள்ளன. இதன் கடைசி ஏடு இல்லே.

---

வரிசை எண்: 1332 சுவடி எண்: 678(c)

# வைத்தியம்—மந்திரம்

ஏடுகள்: 12. ஏட்டின் நிலைமை: மிக மிகப் பழுது.
பக்கத்திற்கு: 8-9 வரிகள். கி. எண்ணிக்கை: 250.
அளவு: 25 × 4 சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அறியக்கூடவில்லே. முழுமை: முற்றற்றது.

**தொடக்கம்:**

ரு—ரா ரா ரா ரா அம் அம் டும் டும்
அரி அரி யென்ருேது காவல்விட
வயிரவதி காந்தியென்று கட்டுரைக்க
ஓங்கார மிட்டிட் டோதே. 5

**முடிவு:**

பாச்சலி லேட்டேனப் பன்றி———சலில்
வாச்சது பொன்குரு மந்தனுரோறையில்
மூச்சது முட்டி————படி
வாச்சது சித்தி வகுத்துரைப் பேனே. 176
வகுத்தது வெள்ளியில் வருமட்ட கறமும்
பகுத்————————

**காலம்:**

இல்லே.

**குறிப்பு:**

இதில், மாந்திரீகம் மிகுதியாயுள்ளது.

---

வரிசை எண் : 1333 சுவடிஎண் : 679

# சுப்பிரமணியர் அகத்தியருக்குச் சொல்லிய ஆணி முறை

ஏடுகள் : 75. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 4-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1500.
அளவு : $22\frac{1}{2} \times 3$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : சுப்பிரமணியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

கண்ணுதலோன் பெற்ற கணபதியை யான்வணங்கி
மண்ணிலுள்ளோர்————யெண்ணரிய
பொன்னுணி கொத்தை புகழ்ந்துரைப்போன் பூதலத்தில்
யென்னாளும் மேலே————

**முடிவு:**

முழுகையிலே சூடெல்லாம் தணிந்து போகும்
முன்னிலயாய் கண்ணெரிவு குளிர்ச்சி யாகும்
பழுக்காது திரேகமது பொன்போல் மின்னும்
பண்பான நீர்க்கடுப்பு வெள்ளை தீரும்
அழுகாது விந்துவங்கே இருகும் பாரு
அப்பான மூலத்தில் சூடு போகும்
நழுக(வே) சூலையுட கருணை வாங்கும்
நலமான போகருட கடாட்சந் தானே.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், கெவுளி சாத்திரம், மருந்தீட்டுக்கு, குளிர்தாமரைத் தயிலம், கண்சிவக்குறது முதலானதற்கு எண்ணெய், சருவாங்கி வாதத்துக்கு, பெரும்பாட்டுக்கு வாலைரசம் முதலியன உள்ளன.

இதில், வெவ்வேறு ஏடுகள், வெவ்வேறு எழுத்துக்களில் உள்ளன.

———❀———

**வரிசை எண் :** *1334* சுவடி எண் : *680 (a)*

# அகத்தியர் சகல கலைக்கியானம் 1200க்குச் சுருக்கம்–120

**ஏடுகள் :** *37.* ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
**பக்கத்திற்கு :** *8-9* வரிகள். கி . எண்ணிக்கை: *700.*
**அளவு :** *18 × 3* சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர்:** அகத்தியர். முழுமை : குறைபாடுடையது.

**தொடக்கம்:**

......கும் பூரண.......கச்
செகத்திலே வானீர் விட்டு மத்தித்துத்
துரகிடில் கணெ.........ஊர்க்குருவி
புடத்தைப் போட்டு சமத்தாக...........தே. 7

**முடிவு:**

திறந்ததொருத் தமர்வாசல்க் குள்ளே நீயுஞ்
செலுத்தடவார் சினைதனை ரவியில் மைந்தா
பரந்ததொரு வாசியது பதிவு மாகும்
பதிவான தீபவொளி கண்ணில் காணும்
கரந்ததொரு பால்போலே அமுற்த மூறுங்
கருவான அமுற்தத்தைத் தினமுங் கொள்ளு
சிறந்ததொரு பூரணத்தைத் தினமுங் கொண்டு
சிவமான மவுனமதில் சேர்வாய் முத்தே. 120

அகத்திய மாமுனி யருளிச் செய்த சகல கலை ஞானம்
ஆயிரத்திரு நூறுக்கு சுருக்கம் 120
எழுதி முகிந்தது முற்றும்
குழந்தை ஆனந்தா பாதம் துணை

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், கற்பங்கொள்ளுகிறவர்கள், வீரமெழுகு, கெந்தகத்தயில ஊதியந்த தயிலம், அண்டவித்து, மாரணவசியம், கற்பூரவைப்பு,

மெழுகு, பாசாணக்கட்டு, உருவகைக்கரு விபரம், தவசுபன்னத் தயிலம், அஷ்டசித்து கரு, அய்ங்கோலத் தயிலத்தில் விநோதம், ஆதியந்தம் கோஷ பீஷம், முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1335. சுவடி எண் : 680 (b)

# அகத்தியர் ஞானம்-12

ஏடுகள்: 5 (39—43). ஏட்டின் நிலைமை: மிகப்பழுது.
பக்கத்திற்கு : 7—8 வரிகள். கி. எண்ணிக்கை : 75.
அளவு : 18 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

காணப்பா கிஷமுகனைப் பணிந்து போத்தி
கடந்துநின்ற மூலவன்னிக் கப்பால் நின்ற
பூரணமா மனோன்மணித்தாய் பதமும் போத்தி
புகழான வேதாந்த சுருக்கஞ் சொல்வேன்.

**முடிவு :**

குறையாமல் லுன்னைப்போல் (சி)வப்பு மாகும்
கூறரிய நவலோகம் ஊாத்துக் கொன்று
நிறையோடே நின்றவர்க்கு மெல்லாஞ் சித்தி
நேராகப் பன்னிரண்டு பாட்டு முத்தே. 12

தெஷ்சணாமூர்த்தி பாதமே கெதி
குளந்தை ஆனந்தா லட்சிக்க
சிந்தாமணி துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், தம்பனக் குளிகை என்ற தலைப்பு மட்டும் காணப்படுகிறது. ஈற்றில் 'குழந்தை ஆனந்தா' பேசப்படுவதால் இது, எழுதியவருடைய குருவாக இருக்கலாம்.

வரிசை எண் : 1336 சுவடி எண் : 680 (c)

# மச்சமுனி எண்ணூற்றில் தெளிவு

ஏடுகள்: 22(44–65) ஏட்டின் நிலைமை: மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 8 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : 18 × 3 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : மச்சமுனி. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

ஆகத்தால் கெவுரிவெள்ளை வீரந் (தா)ர
மப்படியே அமுரிஅரைப் பொன்று பின்றும்
போகத்தான் குமரஅரைப் பொன்று பின்று
வஷ்த்துப்பூட் டியரைகாட்சியிலே தேன்விட் டப்பா

**முடிவு :**

னூலான சட்டைமுனி ஞானம் பாரு
னுகருவாய்த் தேவர்அமுர்த மாகு மப்பா
காலான வளியிதுதான் வாமத் தோற்கு
கள்ளேது குடித்ததனுல் வெறியுண் டாமே. 44

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சன்னி மாத்திரை, வாகைமேல் புல்லுருவி, ஆலின்மேல் புல்லுருவி மை, அருகம்புல் மூலி, கெந்தகத் தயிலம் முதலியன உள்ளன.

இது, சட்டைமுனி 800-லிருந்து சிறந்த பாடல்களைக் கொண்டு உள்ளது.

---

வரிசை எண் : 1337. சுவடி எண் : 680 (d)

# சட்டைமுனி பட்சணியில் தெளிவு

ஏடுகள்: 3 (66—68). ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
பக்கத்திற்கு : 6—8 வரிகள். கி. எண்ணிக்கை : 40.

அளவு : 18 × 3 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : சட்டைமுனி. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

..........மெள்ளக் கண்டு
வெகுகோடி சித்தர்தவஞ் செய்தார் பாரே
மாருத பேரொளியே சொற்கஞ் சொற்கம்
மதியான பூரணமே சத்தி யாளுள்
கூருத கற்பமடா—குமரி கற்பங்
கூரறிந்து கொண்டவனே சித்தன் சித்தன்
நேருக நின்றவனே அருளைக் காண்பான்
நின்ற நிலை தப்பிவிட்டா லொன்றுமில்லை யென்னே. 28

**முடிவு :**

காணுமே விந்து கயிலைப் பதிதனில்
தோணுமே ஞதஞ் சுருதி முடிந்திடம்
பேணுவாள் சத்தி பிற்படில் பன்றியே
ஊணும தாகு உயிரரு வாசியே, 48

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதுவும், சட்டமுனி பட்சணியிலிருந்து சிறந்த பாடல்களைக் கொண்டது.



வரிசை எண் : 1338. சுவடி எண் : 681

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 166. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 4—5 வரிகள். கி. எண்ணிக்கை : 3500.
அளவு : 44 × 3 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : பலர். முழுமை : முற்றற்றது.

தொடக்கம்:

அன்னமே கோழி ஒணுன்
மயிலென நடக்கும் வாதம்
பின்னேஒர் ஆமை அட்டை
பெருத்திட லடித்த மாகும்
சொன்னதோர் தவளை பாம்பு
சுத்திய அய்ய தென்று
அன்னமே நடையே கேளாய்
அமந்ததோர் நாடி தானே. 1

முடிவு :

சகாதேவி என்ருல் கற்றைக்காம்புயிலை
நருவலி யென்ருல் வெட்டிவேர்
சகினியாவது சிறுக்கீரை
முறியாவது கொழுந்தி
ரெத்தக் கழிச்சலுக்கு மாம்பட்டெ கெஷ்யம்.

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மூணு நாளை மாறலுக்கு, சிலேத்தும சுரத்துக்கு பாட்டு, விஷ சுரத்துக்கு பாட்டு, சிலேத்தும வாதசுரத்துக்கு, அஸ்த்தியில் சுரம், அசாத்திய சுரம், அசாத்திய சன்னி லட்சணம், தேளுக்கு, கண் நோவுக்கு, மருந்தீட்டுக்கு முதலியன உள்ளன.

இடையிடையே மந்திரங்களும் சக்கரங்ளும் உள்ளன. ஏடுகள் ஒடிந்துள்ளன. 21-வது ஏடு 18 என்றுளது 29வது ஏடு 2 உள்ளது. 37க்கு பிறகு 33 தொடக்கம். 60–ல் 2 ஏடுகள் உள்ளன. ஏடுகள் சரியில்லை.

---

வரிசை எண் : 1339. சுவடி எண் : 682 (a)

# நீலகண்ட வாலை

ஏடுகள் : 10. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது. பக்கத்திற்கு : 4 வரிகள். கி. எண்ணிக்கை : 80. அளவு : $22\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : அறியக்கடவில்லை, முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

ஆதியில் வுற்றுமையாள் தன்னுடனே
அன்பாய் அருளிச் சொல்ல
வேதமுனிக்......ான நனதி
சாதிலிங்கம் நூத்திருபது களஞ்சித்தானேடுத்து

**முடிவு :**

அஞ்சுவகை மக்க மெடுத்து பின்னும் நேற்ந்து
பொடியாக்கி யதில் வெருகடியுஞ் சேர்த்து
நிரையாக பசுவின் வெண்ணை யனுபானந் தன்னிலேயே
காற்க தனி... ...தனக்கேழுநாள் குடுக்க
. . ... யாகத் திகுறது காசினி....யே.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், நீலகண்ட வாலை செய்முறையும், பூசிக்கும் முறையும், பயன்படுத்தும் முறையும் கூறப்பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1340. சுவடி எண் : 682 (b)

# வைத்தியம் வசனம்

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது. பக்கத்திற்கு : 4 வரிகள். கி. எண்ணிக்கை : 30. அளவு : $22\frac{1}{2} \times 2\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

மல் கட்டிஞல் கடுக்காய் பிஞ்சி கொண்டுவந்து
கொட்டையை எடுத்துப்போட்டு......
னேக அரைத்து உள்ளுக்குக் குடுக்கவும்
பேதியாகும்.

முடிவு :

மாத்திரைபண்ணி நிழலில் உலத்தவும் இருமல், செயம், காசம் யீளை யிதுகள் தீரும் பத்தியம் இல்லை.

தாளக மாத்திரை

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், மலம் சலம் கட்டினல் அதற்குப் பத்து, புங்கன் எண்ணை தும்மட்டிக்காய் மொழுக்கு முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1341. சுவடி எண் : 683

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 125. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 5—6 வரிகள். கி. எண்ணிக்கை : 2000.
அளவு : 23 × 3 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : பலர். முழுமை : முற்றற்றது.

தொடக்கம் :

**இதுவும் ஒருவகை கூழ்ப்பாண்ட லேகியம்**

கொள்ளவே கூழ்ப்பாண்ட லேகி யந்தான்
குணமான கூழ்ப்பாண்ட......ஞலு
விள்ளவே தாழையுட விழுதின் சாறு
விருதான........ன்னம் பூவொன்று

முடிவு:

பிறமியெலை சுறுமொளகு யிதுகள்
கியாழ வத்து ஒரு மாத்தி......
அரை ஆழாக்கு கியாழம் கொடுக்க
சகல வாயுவும் விடும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், வருமுள்ளித் தயிலம், கீழாநெல்லித் தயிலம், கொடிமாதளை லேகியம், தேரை நெய், முள்ளங்கி லேகியம், பேயன்வாழைப்பழ லேகியம், அசுவகெந்தித் தயிலம், பேதிஎண்ணெய், லிங்கபஸ்பம், சுவாச காசங்களுக்கு கியாழம், தேங்கா நெய், குன்மத்துக்கு அப்பளாக் காரக் கியாழம் முதலியன உள்ளன.

இடையிடையே ஏடுகள் இல்லை.

---

வரிசை எண்: 1342 சுவடி எண்: 684.

## வாலை பூசை

ஏடுகள்: 18(2-19). ஏட்டின் நிலைமை: மிகமிகப் பழுது. பக்கத்திற்கு: 9-10 வரிகள். கி. எண்ணிக்கை: 500. அளவு: $23\frac{1}{2} \times 3$ சென்டி மீட்டர். எழுத்து: தமிழ். ஆசிரியர்: அகத்தியர். முழுமை: குறைபாடுடையது.

**தொடக்கம்:**

காரப்பா பூசைவிதி போகனுதர் பாடினூர்
சக்கரமொன் றுரளித்து வைத்தார்
ஆரப்பா எனைப்போலே சொல்லப் போரார்
ஆச்சரிய மாச்சரியம் ஆயி ஆட்டு
சீரப்பா பூசைமடம் முழந்தா னஞ்சு
. . . . . . . . . . . . . . . . . . . .
கம்மென்ற தூபங்கள் காட்டி மேலே. 6

**முடிவு:**

கோடிவித்தை தொந்தங்கள் செய்ய வென்றால்
கூறினேன் பூனீரை வாரிக் கொண்டு
ஆடிவித்தை உத்தம தாளிச் சாத்தில்
அரைத்துருட்டி வில்லைதட்டி புடத்தைப் போடு
வாடிநீ திரியாதே அஞ்சுதர மானல்
மகத்தான சுண்ணமாகு . . . . . . . . 87

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இது, அகத்தியர் பூசாவிதி-200 போல் உள்ளது. தொடக்கமும் முடிவும் இல்லாததால் அறியக்கூடவில்லை. முதல் ஏடு இல்லை.

இதில், லிங்கஞ்சுருக்கித்தயிலம், சகல சரக்குக்கட்டு, வெள்வங்க பற்பம், நாகச் செந்தூரம், ஏக மூலிகைக்கு செயநீர், லிங்கசுத்தி, சாரக் கட்டு, ஏக மூலிகை, உப்பு நீறு, நாகபற்பம், துரிசு வெள்ளை முதலியன உள்ளன.

---

**வரிசை எண் : 1343** **சுவடி எண் : 685**

# திருமந்திரம்--நிமிளைக் கட்டு

ஏடுகள் : 8. ஏட்டின் நிலைமை : சிறிது பழுது.
பக்கத்திற்கு : 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 150.
அளவு : 23 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : திருமூலர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

மேனி யெருக்கு உளுரு நுணுச்சாறு
வாணிய தாம்புலம் வழங்கிய வெங்காரங்
காணிய மத்தை காய்கஸருஞ் சுராபானம்
தாணிப் பழச்சாறுச் சுருக்கிடே. 1

**முடிவு :**

சீலைமண்செய்து பத்தெருவில் புடம்போடவும்
நாகம் முழுவலிவு வேரு—காரீயம் பலம்—1
உருகுமுகத்தில் அம்பிரகச் சத்து விராகனெடை—1
ரசம் விராகனெடை— 1 வெடியுப்பு விராகனெடை $\frac{1}{2}$ கூட்டி
அரைத்துக் குடுத்து, அதுக்குமேல்ச் சாரம் பலம்—1
கிளிஞ்சிப் பொடி பலம்— 1 கூட்டி......

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இது மை பூசப்படாத சுவடி. இதில் நிமிளைக்கட்டு, என்ற தலைப்பு இருக்கிறது. இது உரையுடன் இருக்கிறது.

---

வரிசை எண் : 1344. சுவடி எண் : 686

# திருமூலர் சூத்திரம்--30

ஏடுகள்: 7. ஏட்டின் நிலைமை: மிகப் பழுது.
பக்கத்திற்கு : 7—8 வரிகள். கி. எண்ணிக்கை : 150.
அளவு : $19\frac{1}{2} \times 2\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : திருமூலர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம் :

ஞட்டினி லய்ந்தும் நயம்பட ஓர்ந்துங்
காட்டினி மூண்டுங் கண்டு தெளிந்து
வீட்டினில் ரெண்டும் வெளியினில் ஒன்றும்
கூட்டி முடிக்கக் குருபற்ப மாமே. 1

முடிவு:

பொடியாஞ் செந்தூரம் புகைபட் டிடமெல்லாம்
கடையான காயம் கனபேதி பேதிக்கு
மடையான துத்த மகாமேரு தாயிடும்
கடையான காயம் கனகம தாமே. 31

திருமூல நாயனார் அருளிச் செய்த
சூத்திரம் 30 முடிந்தது. முத்தும்
சீனிவாசன்.

(இதன் பின்னர்)

சந்திர னுப்பு சதாசிவன் பெண்டி
அந்த முளறி அகத்துமனே யான
..........சோறும் பகர்ந்தோமே.
ஸ்ரீராமசெயம் நன்றாக. (எனப்பாதி ஏட்டினும்)

(பின்பாதி ஏட்டில்)

வச்சிரகுகை: குட்டம் பலம் ½ சவுட்டுமண் பலம் ½

கெவனர் முன் 15-ல் ராமேஸ்தபர்கரை திறக்க பொன்
என முடிகிறது.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், குருபற்பம், தங்கம் வெள்ளி செயல்கள் முதலியன மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1345. சுவடி எண் : 687

# அகத்தியர் ஞானம்

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : மிகப் பழுது.
பக்கத்திற்கு : 5—7 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
அளவு : 23 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

பூறணத்தைப் பற்றிஅறு பதியில் லூன்றி
புகழான மூவரையில் மூவரையுங் கண்டு
காறணத்தைக் கண்ணுலே கலந்து நோக்கி
கணபதியின் பதங்கூட்டிக் கீழ்முக் கோணம்.

**முடிவு :**

கொண்டுவல்லோ அவுஷதங்கள் கொடுக்கச் சேநீ
குற்றமெல்லாந் தான்தீர்ந்து வியாதி போகும்
கொண்டுசெய்வா ரனேவோரும் சமர்த்த னென்று
தொல்லுலகில் செல்வமதாய் வாள்வார் தானே. 11

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், கருமவினை தீரவேண்டிச் செய்ய வேண்டிய சாந்தி, பூசை, ஹோமம் முதலியன கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 1346 சுவடி எண் : 688

# குழந்தைகள் வைத்தியம்

ஏடுகள் : 6. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 7-8 வரிகள். கி. எண்ணிக்கை: 200.
அளவு : 34 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : பலர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

கெந்தம் விராகனிடை—2 தாளகம் விராகனிடை—2
திப்பிலி ,, 2 முளகு ,, 2
வாளம் சுத்திபண்ணினது,, ......................
........விராகனிடை 1
கொண்டுவந்து நறுக்கி ஒரு படி தண்ணீர் விட்டு

**முடிவு:**

சூழ்பெறவே குளிகை செய்து....யல் வைத்துக்கொள்ளவும்
மகிழுடன் அழிஞ்சி னேர்வாளம் வெண்குண்டிவகை
ஞலும் வித்துடன் பொன்முழுகுத் தில்லையொரு....
ருடன் அரிதாறம் னேம்..

திரித்திச்சத்தம்பலம்
(திருச்சிற்றம்பலம்)

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில் குழந்தைகள் வைத்தியம், பிள்ளைகளுக்கு கெந்தகம் செந்திரிக்க, கெந்தகத்தயிலம், தடைவிட, பிள்ளை பெறமாட்டாதவளுக்கு யெண்ணெய், ஓத கிருணிக்கு, இஞ்சிக்குழம்பு. பல வாயுவுக்கு, கடிகளுக்கு, பிசாசுக்கு கலிக்கம், மந்திரம், விநோதம் முதலியன உள்ளன. ஏடுகள் எலிகடித்தும், ஒடிந்தும் உள்ளன,

வரிசை எண் : 1347. சுவடி எண் : 689

# சத்துருமித்துரு சாத்திரம்

ஏடுகள் : 16. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 4-7 வரிகள். கி. எண்ணிக்கை : 200.
அளவு : $15\frac{1}{2} \times 2\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கடவில்லை, முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

நன்ருக

| | | |
|---|---|---|
| சத்தி | ஆக உப்பு 3 | ஆக பூதம் 5 |
| சிவம் | கல்லுப்பு 100 | ......ம்புக |
| நடு சவுக்காரம் | வெடியுப்பு 10 | பூசிற....100 |
| அடிபூனீர் | சீனம் 10 | வெடியுப்பு |
| முடி துரிசு | பாசாணம் | கிளிஞ்சிசுன்னம் 7 |
| கல்லுப்பு | தயிர் | கல்லுப்பு 1 |

முடிவு :

நாலு சரக்கும் விராகனெடை 4 போட்டு ஏழு நாள் அரைத்து வில்லை தட்டி பழசார் பீங்கானில் விட்டு வில்லையைப் போட்டு ரவியில்..........க்க தயிலம்.

**காலம் :**

இல்லை

குறிப்பு :

இதில், யோழநிலை சரக்கு ஆதாயம், பஞ்சபதவி ......., அப்பு லோகம், புளி உப்பு, வீரபற்பம், தாளக பற்பம், கெந்தக மெழுகு, கெந்தகத் தயிலம், கெந்தக செம்பு, முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1348 சுவடிஎண் : 690 (a)

# அகத்தியர் ஞானம்--100

ஏடுகள் : 20. ஏட்டின் நிலைமை : மிகமிகப் பழுது.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 600.

நாமப்பா உள்ளபடி சொல்லி வைத்தேன்
நாதாக்கள் கடாச்சத்தாற் சூத்திரந்தான் முற்றே. 1496

மீனுட்சி சுந்தரசேபராள் துணே.

செய்ய வேண்டியது.

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், முதலில் அட்டவணை எழுதிய ஏடுகள் இரண்டு உள்ளன. இதில், வாதகுணம், பித்தகுணம், சிலேஷ்ம குணம், மேகம் வரும் வரலாறு, சுக சன்னித்தோற்றம், மூலரோகப் பிறப்பு, கிராணி வகை, மேக வகை, கெற்ப மேகம், சூலை விகற்பம், பெண்களுக்கு கெர்ப்ப சூலை, கண்ணோய் குணம், கெந்தி சுத்தி முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 3 (a)/D. 3, எண் 323 (h)/D, 629 போன்ற தெனினும் அவற்றில் முறையே 528, 100-ம் ஆகப் பாடல்கள் உள்ளன. இதில் 1496 செய்யுட்கள் உள்ளன.

—❀—

வரிசை எண் : 1453 சுவடி எண்: 742(b)

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 7. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 6—9 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : $33\frac{1}{2} \times 3$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

**சகல ரோகத்துக்கும் தேங்காய் நெய்**

முத்த தேங்காய் நாற்பது திருவி
வெந்நீர் விட்டுப் பிசைந்து பிழிந்து
எடுத்துக் கொள்ளவும். அதில்
தாளகம், கெந்தகம், கருஞ்சீரகம்
வகைக்கு களஞ்சு நாலு.

**முடிவு :**

ஆகாசக் கவனமும் கண்ணுக்கு முன்னாகத் தோனும்
　　வாசித் தயிலத்தைச் சித்தர் நன்றாய் மறைத்தல்லவோ
மற்ற சாஸ்த்திரங்கள் பாடிப் பார்த்த பேருக்குப்
　　பரியாமல்ப் போச்சு யிதை பாரிலொருவருக்கும்
　　　　பகர முடியாதே.

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், தேங்காய் நெய், தாது புஷ்டிக்கு பிரையோகம், உப்பை ரசமுறிந்த பேர்க்கு மாற்று, மலக்கட்டு வாங்க, பவுத்திரத்துக்கு ஒருத்தலைவலிக்குப் புகை, சன்னிக்கி எண்ணெய், கெர்ப்ப வியாதிக் குணமும் மருந்தும், ரெத்தரோகம் வருங்குணம், மருந்து, இருமலுக்கு மருந்து, இஞ்சிக்குளம்பு முதலியன உள்ளன.



வரிசை எண் : 1454. சுவடி எண் : 743(a)

# அகத்தியர் இந்திர சாலம்--ஆயிரத்திநூறு முதற்காண்டம்

ஏடுகள் : 29. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1200.
அளவு: $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

**காப்பு**

சீரொரு சால வித்தை
　　சிவன்குரு வருளில் செய்த
வேரொரு கருவைச் சும்மா
　　உதகமீ துரைக்க லுற்ற

நூல்

பூரண வாலை ரூபம்
புரந்தமுத் தீட்சை யெல்லாங்
காரண குருவே சொல்லுங்
கடசியில் குருவே ஆடும்

முடிவு:

நிற்க முதக்காண்டம் தெளிந்த பல்மொழியாய்
முற்கமெனச் சொன்ன முறையெல்லாம்--பாற்கவே
சித்தருக்கு மீசனுரை செப்பியதா லேயிருநூற்
முத்திக்கு மூதுரை நூல் முத்தும் 200
முதக்காண்டம் முத்தும்.

காலம்:

இல்லை

குறிப்பு:

இதில், ஈன மஃறைக்கரு, சாலரூபி விபரம், அட்டசத்தி வகை, களுவன், சாகாத கால்; வேகாத் தலை; போகாப் புனல், சொக்கிய மருந்து. முன்கூறிய பாவையாட்டு, பாவைத்தொளில் பூசை, களுவன் பூசைமந்திரம், ஆகிருசனஞ்சாலக்கரு, விபரம், மோகன சாலம், நாத வித்தை முதலியன உள்ளன.

---

வரிசை எண்: 1455. சுவடி எண்: 743(b)

# அகத்தியர் இந்திரசாலம் ஆயிரத்திருநூறு - குறி சொல்சாலத்திரட்டு--இரண்டாங்காண்டம்

ஏடுகள்: 30. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை.
பக்கத்திற்கு: 8-9 வரிகள். கி. எண்ணிக்கை: 1200.
அளவு: $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர். முழுமை: முற்றுமுளது.

தொடக்கம்:

முத்திதரு காண்டத் தொகுதியைப் பாட
முற்கருவி லொருகருவை கூட்டிக் கோநீ
புத்திகொடு சூரிய கிராணம் பார்த்துப்
பருஞ்செடியா மருதூணி காப்புக் கட்டி

**முடிவு :**

பாட்டனென்று நினையாதே குளறு வானைப்
 பண்டதெனே பணம்பிடுங்கும் பசியா தென்றுங்
காட்டையிலே யிருநூறு வயித்தி யற்குக்
 கைகண்ட வித்தையடா காண்ட முத்தே. 100

இரண்டாங் காண்டம்

முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், மரண மை, களவுசெய்ய, ஊர் மேஞ்சாதிக்க, வெட்டுந் தலைமீழ்க்க, விஞேதவித்தை, பழைய உருவாக, ஆனை, பன்றி, மாடு மேதி, பணவித்தை, பயிரவன், ஏழுக்கு, ஒன்பதுக்கு விடமாத்து திரியாகி ருசனம், குருவின் வித்தை முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1456. சுவடி எண் : 743(c)

# அகத்தியர் இந்திரசாலம்--ஆயிரத்திருநூறு மூன்றுங்காண்டம்

ஏடுகள் : 45. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8-10 வரிகள். கி. எண்ணிக்கை : 180.
அளவு : $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

பூரணி புவனை வாலை
 பொதிந்தமெஞ் ஞானஞ் சோதி
நாரணி கெவுரி பூத்த
 நாயகி யிமைய வெற்பில்
சீரணி பொருளாய் நிற்குஞ்
 சிவகுரு விடப்பா கத்தில்

**முடிவு :**

பொய்யென்று நினையாதே நாக மெய்தும்
　　பூலோக வாதியென்று பொருளும் பெத்து
உய்யென்று நானுரைத்த மூணுங் காண்ட
　　முத்தசெய்தி இருநூறு முரைத்தேன் முற்றே. 200

குருமுனி துணை
மூணுங்காண்ட முற்றும்

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

**இதில், விடத்துக்கு,** மாதளத்தண்ணீர், சீட்டுவித்தை, தேசி மண்டை, **அட்டகர்மம், கருக்கிடை, ஆனை, ஆணை, உந்திவேர்,** சுரோணிதம், வித்தை, **கும்பம்,** வேதை, எமன் வரவு, விஞேதம், மிருக வித்தை, மணி, வயிரவன், ஆலயம், ஞாலம், கற்பமுறை, கற்பம் முதலியன உள்ளன.

---

**வரிசை எண் :** 1457. **சுவடி எண் :** 743(d)

# அகத்தியர் இந்திரசாலம்--ஆயிரத்திருநூறு நாலாங்காண்டம்

ஏடுகள் : 24. ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
**பக்கத்திற்கு :** 10 வரிகள். **கி. எண்ணிக்கை :** 1000.
**அளவு :** $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

பூரணி நாலாங் காண்டம்
　　புவிமறை பஞ்ச னங்கள்
சீரணி திலத மாற்றஞ்
　　செகவசி யங்கள் வைப்பு

முடிவு:

முத்தியாம் நாலில் அஞ்சிட
மொழிந்தேன் பத்தியா யப்பா
—த்துபல தோளி லாட நாலாங்
குருமுனி சாலத் திரட்டு
ஆயிரத் திருநூறும் எழுதி முகிந்தது.
முத்துமிந்த சாத்திரம்
பத்திரப் படுத்தியவனுக்கு தற்கும் 200

குருமுனி துணை

காலம் :

இல்லை

குறிப்பு:

இதில், வாதகரு, அட்டகற்மம், சத்துரு, பிரிவுகட்டி வைக்க, வசியமாயன்விது, மெழுகு பணவித்தை, முப்பூ வித்தை, மந்திரம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1458 சுவடிஎண் : 743(e)

# அகத்தியர் இந்திரசாலம்-ஆயிரத்திருநூறு-ஐந்தாங்காண்டம்-சிகவசியம்-இந்திரசாலம்.

ஏடுகள் : 44. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 7-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1700.
அளவு : $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

காண்டமுத்தே

காண்டமடா முன்சொன்ன இந்திர சாலங்
கைவல்லிய மாகவுந்தான் கருவைக் கேளு
பாண்டமடா மலமிருந்த நாவாய்ப் பாண்டம்
பாளாக வுடையுமுன்னே வசியஞ் செய்ய

முடிவு :

வாளப்பா ஆறேளில் வகையுஞ் சொன்ஞெம்
வய்த்திருந்தோர் தமைவணங்கி வாங்கி நீயும்
தாளப்பா வராம லுலக மீதில்
சாத்தினேன் புலத்தியனே அஞ்சாங்காண்ட முற்றே.203

அஞ்சாங் காண்டம் முற்றும்
தேவி சகாயம்

காலம்:

இல்லை

குறிப்பு :

இதில், இடுசாமக்கரு, ஆகாசப் பிரளி, சகல பிறிவு' ஆள்க் காட்டி மை, விஞேதம், தண்டுயோனியடைய, மாத்து, வாதம், சுபகற்ம அபகற்மம் இரண்டுக்கும் மாரண சக்கரம், சகல சன்னி நோய்க்கு, நொடி வித்தை வயித்தியன் பிழைப்புக்கு, பணவித்தை, துள்ளு வித்தை முதலியன உள்ளன.

—❀—

வரிசை எண் : 1459 சுவடி எண்: 743(f)

# அகத்தியர் இந்திர சாலம்--ஆயிரத்திருநூறு ஆருங்காண்டம்

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8—10 வரிகள். கி. எண்ணிக்கை : 500.
அளவு : $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

உரைத்ததோ ராராங் காண்டந் தன்னை
யுறுதியாய் மனமுடைய சிவயோ கிக்குந்
திரைமறைவா யோகமொடு வாதஞ் சொன்ஞேந்
திடன்சரிகை கிரிகையது செடத்தைத் தூக்கும்

முடிவு:

மாறுமே அஞ்சாங் காண்டம்
வகைவிபர மதிலே சொன்னோம்
கூறுமே மூணாங் காண்டம்
குலாவிய விநோத வித்தை
நீறுமே முதலாங் காண்டம்
நிகழ்த்தினேன் சூட்ச மெல்லாம்
மாறுமே மாற்ப தற்கு
அகத்திய னுவான் சொன்னேன். 101

ஆறாங் காண்டம் முற்றும்

காலம்:

இல்லை.

குறிப்பு:

இதில், தேசுங்கு என்ற தலைப்பு மட்டும் உள்ளது மற்ற ஏடுகளில் தலைப்புக்கள் இல்லை.

---

வரிசை எண்: 1460. சுவடி எண்: 743(இ).

# அகத்தியர் இந்திரசாலம்-ஆயிரத்திருநூறு ஏழாங்காண்டம்-பரிபாசை.

ஏடுகள்: 11. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை.
பக்கத்திற்கு: 7-9 வரிகள். கி. எண்ணிக்கை: 450.
அளவு: 30½ × 3 செண்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர். முழுமை: முற்றுமுளது.

தொடக்கம்:

பூரணி புவனந் தன்னில்
பொதிகையில் வந்து நாளுந்
சீரணி முருக நந்தி
சிவனுமை யருளும் பெற்றுத்

தாரணி விநோத வித்தை
சாலத்தின் கருக்கள் சொன்னேன்
நாரணி யேழாங் காண்டம்
ஆனைமா முகத்தன் காப்பு

**முடிவு:**

வேறென்ன வுருவே வேறு
விடத்தலை யுருவே மூலம்
பாரென்ன ஏழாங் காண்டம்
படித்திரு மவுன முற்றே. 100

ஏழாங்காண்ட முற்றும்
குருவே துணை

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், எட்டாம் ஏட்டின் பின்புறம் அடைக்கலம் என்ற தலைப்பு மட்டும் உள்ளது. பிற ஏடுகளில் தலைப்புக்கள் இல்லை. முன் சொன்ன ஏழு காண்டங்களிலும் மொத்தம் 1100 தான் உள்ளன 1200 இல்லை. எனவே இதன் எட்டாங் காண்டம் இதில் இல்லை. ஆனால், பின்னர் 'குறுமுனி இந்திரசால வெண்பா' என்ற பகுதி இச்சுவடியில் இருக்கிறது. அது இதன் 743(*i*)–ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

---

வரிசை எண் : 1461. சுவடி எண் : 743(h)

# சரநூல்

ஏடுகள் : (1+1) 2. ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 4-7 வரிகள். கி. எண்ணிக்கை : 30.
அளவு : $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

பிறந்ததொரு விசனமது மெய்பொய்யோ வென்றால்
பலத்ததொரு சூரியனில் மெய்யெனவே சொல்லு
கறந்தபால் சந்திரனில் பொய்யெனவே சொல்லு
கடியதொரு விஷமுண்டோ யில்லையோ வென்றால்

**முடிவு:**

வெள்ளிவெண் டிங்கள் விளங்கு புதனிடம்
வுள்ளிய மந்த னிரவி சனிபலம்
வள்ளல் வியாழம் வளர்பிறை யோனிடம்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், முதல் ஏடு மட்டும் 3 செய்யுட்களுடன் சரநூல் என்றுளது. அடுத்த ஏடு, 'சொற்ண வயிரவன்' என்ற பெயரால் 'அசிய ஸ்ரீ சிதம்பர சம்மேழனம்' எனத் தொடங்கி, 'மூவிமரும் றீம் றீம் உம்படு சுவாகா' என்று முடிகிற ஒரே மந்திரத்துடன் இருக்கிறது.

---

வரிசை எண் : 1462. சுவடி எண் : 743(i)

## குறுமுனி இந்திரசால வெண்பா--நூறு

ஏடுகள் : 12. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு: 8-10 வரிகள். கி.எண்ணிக்கை : 500.
அளவு : $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

**கபிலை நிற முட்டைக் கரு**

கருவகையில் மூலிகைச் சுருக்க மென்று
மொருவிபரம் வெண்பா வுரைக்கவே—திருவளரும்
கந்தனுக்கு முன்னுதித்த காரானை ஐந்துகரத்
தந்திமுகத் தோன்சாலக் காப்பு

**முடிவு :**

குறிவெண்பா விந்திரகண்டி கோகரண நூறு
அறிவுண்டாஞ் சால மடக்கும்—பிறிவுதரு
தெட்சணியைப் பாரு செகச்சால மாட்டிவிக்க
வைச்சநூறு முற்றுமவு னம் 100

சாலவெண்பா நூறு முற்றும்
குழந்தை விநாயகன் துணை
பொதிகைமுனி பாதாரவிந்தமே கதி

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், கபிலைநிற முட்டைக்கரு, பாவை, துரிசு, திலகம், பட்சணிக் கரு, நாதக்கரு, மறைப்பு, தண்டகபட்சணி, நட்டுவக்காலி, பீரங்கி, காடெரிக் கரு, நீலகண்டி, அக்காள், துரிசு, மோடி, பசாசு போக மை, தேவிவர, சறுவபேய் புகைபோட, மாரணக் கரு முதலியன உள்ளன.

இது, அகத்தியர் இந்திரசாலம் ஆயிரத் திருநூற்றின் தொடர்ச்சியோ என்பது ஐயம்.

---

வரிசை எண்: 1463. சுவடி எண்: 743(j)

# சால நிகண்டு--இருநூறு

ஏடுகள்: 21. ஏட்டின் நிலைமை: நல்ல நிலை.
பக்கத்திற்கு: 6-9 வரிகள். கி. எண்ணிக்கை: 800.
அளவு: $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர் (?). முழுமை: முற்றுமுளது.

**தொடக்கம்:**

ஏத்த சால நிகண்டிரு நூறையும்
சாத்த மூவ ரகத்திய ஞமே
பூத்த தாரணி பூபதி நந்தியைக்
காத்தவேள் கணபதி காப்பதே

**முடிவு:**

பாரினி லிந்த முறைப்படி பாத்து
தேறுநீ பாவஞ் செய்யவும் வேண்டாம்
ஆறிநீ பாரு அறுபது நாலு
நேரிரு நூறு நிகண்டிது முத்தே. 200

சால நிகண்டு முற்றும்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், நயங்கெடுக, யிடுகரு, வழுதலங்காய், மைவாடை, பொட்டு சிதம்பரம், யோனி விரிய, விலங்கு, தெரிக்க, நித்திரை வர, நாவடக்க, ஆட்டுக்கிடை, எதிரிக்கு, துவாலை எடுக்க, சொரையெடுக்க, சாலத்துக்குக் கரு, சூரணம், தயிலம், தெரிசிங்கி முதலியன உள்ளன.



**வரிசை எண் :** 1464. சுவடி எண் : 743(k)

# பூரண சந்திரோதய வாலை

ஏடுகள் : 26. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
**பக்கத்திற்கு :** 7-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1200.
**அளவு :** $30\frac{1}{2} \times 3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

மூச்சுவிடும் போதிருந்த ரசவா தப்பெண்
மோகன பூரண சந்திரோ தயத்தைப் பாட
ஆச்சரிய மாயிரத் திருநூ றுய்ந்து
யரன்சொன்னா ரதிவிந்த யிருநூ றுந்தா

**முடிவு :**

வாருரை சந்திர வாலைமெய் நூலை
பேருரை செய்ய பெரியோ ரெணைநாடிச்
சீருரை செய்தொழில் தெவ்வா சித்தி
யேருவ ரீதிரு நீருரை முத்தே 201

பூரண சந்திரோதய வாலை யெழுதி முகிந்தது
முற்றும்
மீனலோசனை துணை

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், முப்பு, நடுநாயக வேதை, ரசமணி, நாதம் வாங்க, மை, அண்டவித்தை, தெட்சணி, முதலியன உள்ளன.

---

**வரிசை எண் :** 1465. சுவடி எண் : 744

# இந்திரசாலம்--ஆயிரத்திருநூறு

ஏடுகள் : 220. ஏட்டின் நிலைமை : சிறிது பழுது.
**பக்கத்திற்கு :** 8-10 வரிகள். கி. எண்ணிக்கை : 7000.
**அளவு :** 26 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம்:**

காரணமே மூலவட்டந் தன்னில் நிற்குங்
கணபதியும் வல்லபையுந் தேவர் காப்பு
பூரணமாய் பராபரையும் சிவனும் நந்தி
பொருந்திநின்ற பஞ்சகர்த்தாக் கணங்கள் காப்பு
நாரணனும் நான்முகனும் அறியா நின்ற
மன்னுகுரு வருள்சிறந்த குமரன் காப்பு
வாரணம தேறிவிளை யாடு மெந்தன்
நலமான வேதாந்தங் காப்புத் தானே.

**முடிவு :**

ஆமடா சரசசைக்கச் சித்த மெல்லாம்
அவரவர்கள் கண்டுகோகரண மமைத்து வைத்தா
நாரும்பார் விக்கிரமன் றனக்குச் சித்தி
நான்சொன்ன தவனறியா ஞதா ரத்தில்
கூடும்பார் விட்டகுறைக் கார னப்பா
**கோகரண உச்சினிமா காளி (சொ)ன்னுள்**
**யேரும்பார்** வருகற்ப மெனக்கே தோன்றி
**யிகத்தினிலே** ஞமபடி......... 1182.

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், தொடக்கத்தில் அரித்துள்ளதால் தலைப்பு சரியாகத் தெரிய வில்லையாயினும், மூன்றும் பாடலில் யந்திர சாலம் வகையிது வாயிரத் திருநூருகச் சென்னேன்' என்றுளதால் இது இப்பெயர் பெற்றது.

இதில், வழலை, கருனைவிச் சுன்னம், சூலைக்கு ரசபற்பம், கெந்தக பற்பம், காந்த பற்பம், சீவகளைத் தூள், மை, கெவுரி பாசாண மெழுகு, பிசாசு பிணிக்கு, வியாதிக்கு மந்திரம், பாசாண மெழுகு, வெள்ளி சிந் தூரம், கருனைவிக் குளிகை முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1466. சுவடி எண் : 745(a)

# அகத்தியர் ஞானம்--எண்பத்தேழு

ஏடுகள் : 14. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8-10 வரிகள். கி. எண்ணிக்கை : 600.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றும்.

**தொடக்கம்:**

**வெண்பா**

வாக்குண்டாம்.............தமக்கு

**நூல்**

சிந்தையுரை ஞானந் தெளியவுரை பாடுதற்கு
வந்த பருசமா ருதவாழ்க்கையே — செந்தமிழால்
காவியந்தா ணுயிரத்தில் கல்லா ரொருநூலை
தேவியெனும் பூரணியே சீர்

பூரணமாய் மும்மூர்த்தி வந்த வாறும்
பூமியென்றுந் திகிரியென்றும் படைத்த வாறும்
காரணமாய்த் தேவியெங்கும் நிறைந்த வாறும்
கற்பமுண்ட ருஷிகள்சித்தர் சாகாத வாறும்

முடிவு:

அழியாத வாய்வுலே வாய்வுஞ் சேரும்
அஞ்சுமொன்ருய்க் கூட்டிரு லாத்துமா வாகும்
வெழியோடே யில்லண்ண மறித்துக் கொண்டு
மானிடர்களே காயசித்தி ஞான முற்றே. 87.

காலம்:

(முதல் ஏட்டில்) ரத்திராக்கிஷ வருஷம், வையாசி மாசம், 23-ம் தேதி ஆதித்த வாரனுன் எழுதினது.

குறிப்பு:

இதில், பதினெண்சித்தர் பெயர்கள், கும்பிடுசிப்பிச் சுன்னம், பிண்டப் பெருமை, வெளேக்கல் சுன்னம், தங்கநீறு, மணி, வாலே மூன்றெழுத்து, குருமுனி குரு பூசை, முதலான மருந்துகள் முதலியன கூறப்பட்டுள்ளன.

இதில், 87 செய்யுட்களே இருப்பினும் முற்றும் என்றுளது.

இது, எமது சுவடி எண். 324(g)/D. 624 அகத்தியர் ஞானத் திரட்டு 100 போன்றது. இதில் நூறு பாடல்கள் உள்ளன.

---

வரிசை எண்: 1467 சுவடி எண்: 745(b)

# அகத்தியர் சூத்திரம்--ஐம்பது

ஏடுகள்: 7 (15-21). ஏட்டின் நிலேமை: நல்லநிலே.
பக்கத்திற்கு: 8-10 வரிகள். கி. எண்ணிக்கை: 300.
அளவு: 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர். முழுமை: முற்றுமுளது.

தொடக்கம்:

நாடியதோ ரகண்டபரி பூரணமாய் நின்ற
நாதமுற்று கிணேசனெடு கந்தன் காப்பு
பாடியதோர் சிவனுரு மென்னேப் பெற்ற
வாத்தாளும் நாவுதனிற் குடிகொண் டேதான்

முடிவு :

தொண்டுசெய்வாய் பதினாறு வருஷங் காற்றுச்
சோதித்துப் பின்பவர்க்கு யீவா யப்பா
சண்டமா ருதம்போல வெளிய தாக
சாத்தினதோர் வயித்தியந்தா னம்பதுந்தான் முற்றே. 50.

வயித்திய சூத்திரம் அன்பது
முற்றும்
சிவகாமி துணை

காலம்:

இல்லை

குறிப்பு :

இதில், சூலைக்கு, சிரங்குக்கு, அரிதார வெள்ளை, கெற்ப வலிக்கு, வெள்ளீய பற்பம், அரிதாரக்கட்டு, அரையாப்புக்கு, கண்டமாலைக்கு, செந்தூரம், பாசாணக் கட்டு, கோரக்கர் முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 121 (h) / D. 191, எண் 311(h)/D. 569 போன்றது,

---

வரிசை எண் : 1468. சுவடி எண் : 745(c)

# நாடி சாத்திரம்--முப்பத்தைந்து

ஏடுகள் : 4.(22-25) ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 160.
அளவு : 37 X 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

தொடக்கம் :

தெளிவு

ஓங்கிய நாடி தானு
முரத்துமுப் புரியே செய்தாற்
பாங்குடன் கயறுப் போலப்
பண்புடன் பருத்துத் தோன்றில்

வீங்கிய வுடலுக் கெல்லாம்
விளங்கிய நாடி யற்பம்
பாங்குள்ள வுடலுக் கெல்லா
மெழுந்தெழுந் துரத்துப் பாயும். 1

**முடிவு :**

சாய்ந்த வுந்திக் குழியில்
சலமே விழுந்து தானுரு
வாய்ந்து திரியுங் குறுக்குளையு
முகந்தே மாதர் விடைநாளி
லாய்ந்தே வலிக்கு மரைதுடையு
மாய்ச்சி றுக்கு மாகாரங்
கெந்தேக் கிட்டுக் கோடிவிடுங்
கெற்பச் சுரோணித வாயுவிதே! 35

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், தெளிவு, தொந்திப்பு நாடி, பூத சுரத்தின் கஷாயம்' கெற்பக் கிறுமி முதலியன உள்ளன.



வரிசை எண் : 1469. சுவடி எண் : 745(d)

# அகத்தியர் வைத்தியக் கும்மி-பத்து

ஏடுகள் : 1(26). ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 10-11 வரிகள். கி. எண்ணிக்கை : 50.
அளவு: 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

போமெனு மாடா தொடை வேருஞ் சங்கு
பொன்னுகு மாவாரை திப்பிலியு
மாவெனுஞ் சுக்குட னின்பூரல் வீளி
மந்தரை மாதுளை கண்டங் காலி

கோமெனும் வேமுென்ருய் கூட்டியதில் மது
கூட்டிக் குளப்பிய ருந்திடவே
சாமெனும் வெக்கமச் சுரங்கள்
தணியுமென்றே கும்மி யடியுங்கடி 1

**முடிவு :**

கேளாய் மாதே வசக்கி ருணி
கிலேசப் படுத்தும் வாயுவையும்
நாளாய் வத்து மாஸமக் கிராணி
நன்ருய்க் களியுங் கடுப்புமுதல்
மீளாவி ரத்தக் களிச்சல் முதல்
மின்னே யெட்டு நாள்க்கொள்ளப்
பாளாய் நோவு பறந்தோடும்
பரம ஞானே சத்தியமே. 10

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சக்கரம் அன்பத்தொன்று, கிராணி கபாடச் சூரணம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1470. சுவடி எண் : 745(e)

## அகத்தியர் குழம்பு

ஏடுகள் : 1(27). ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 50.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

பேசிய மருந்து கேளாய்
பெருய்காயங் கடுகிந் துப்பு
வீசிய ரசம்பொரிக் காரம்
வியன்மனே சீலைநல் லோமம்
..............................
வகைவகைக் சுளஞ்சு வாங்கே 15

முடிவு:

பதியாய் வியாதி தனையறிந்து
    பகரு மருந்தைத் தானீய்ந்து
கதியாய்க் கொடுக்கும் வல்லோரே
    கைகண் டாற்பத் தியங்காரே. 23

காலம் :

இல்லை

குறிப்பு:

இதன் முன்னர் 'திரிபலாதி லேகியம்' என்ற தலைப்பில், 4 செய்யுட்கள் இருக்கின்றன.

இதில், அகத்தியர் குளம்பு செய்முறை, உபயோகம், அனுபான பேதங்கள் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 159 (b)/D. 253 போன்றது.

---

வரிசை எண் : 1471. சுவடி எண் : 745(f)

# சுரநூல் முதலியன

ஏடுகள் : 3½(28-31). ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 150.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர்- எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

சுரநூலு

ஆமப்பா சுரதோஷத் தாண்மை யெல்லாம்
    மறைத்திட்டேன் முன்பேதா ணடக்க மெல்லாம்
யோமப்பா நட்சேத்திர அவத்தை தொந்தம்
    உற்றுக்கேள் புலத்தியனே மச்சமுனி நீங்கள்
..........................................
    பொருக்குமடா வொன்பதிலே கார்த்திகை நாள்கேளே. 1

**முடிவு:**

குளறுங் குழந்தைசொ லாண்மை குறையாமல்
நீள்நிலத்தில் வளர்ந்து சமர்த்தராய் வாழ்ந்திருப்பாய்
வளமுடனே அகத்தியர் முனியுரைத்த அரும்பொருள்
செகத்தில் அனவொருக்குந் தெளிந்து முற்றும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், சுரநூலுள் விருத்தம் 35 என்றும், பின்னர் மதனகாமேசுவரம் அகவல் என்றும், உள்ளன. சுரநூல் தலைப்பில் 12 செய்யுட்களே உள்ளன. முன் கூறப்பட்ட அகத்தியர் கும்மி முதலியனவும் சேர்த்தே 35 செய்யுட்களாகின்றன. ஆகவே (26-31) ஏடுகள் ஆறுக்கும் சேர்த்தே இதில் கூறப்பட்டுள்ளன.

---

வரிசை எண் : 1472. சுவடி எண் : 745(g)

## அகத்தியர் சூதமுனி சூத்திர நீலகண்டவாலை

ஏடுகள் : 9.(31-39) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 9–10 வரிகள். கி. எண்ணிக்கை : 400.
அளவு : 37 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

நந்தீசர் வேதமுனி சூதமுனி வாழ்க
நாதனடி போத்திசெய்து நயந்திருக்கும் வேளை
யிந்திர வோலக்க மென்ன வாத
வித்தை செய்ய யேதுவகை யென்றருள்

**முடிவு :**

முந்தியிந்தக் குருசெய்தாலு முறுதி யாகு
முறையான வயித்தியத்தில் ஒன்றும் பொய்யா
அந்தியென்ற துருசுநீறு கூடச் சேரு
அரகரா வயித்தியத்துக் காணி தானே. 52

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், உப்புக்கட்டு, செம்பு சுத்தி, முதலியன உள்ளன. இதன் பின்னர், 'அகத்தியர் நீற்றுமுறை மித்திரம்' மூன்று பாடல்களுடன் இருக்கிறது. நீலகண்ட வாலை செய்யுள் 49, நீற்றுமுறை மித்திரம் 3 செய்யுள் ஆக 52 செய்யுட்கள் இருக்கின்றன.

வரிசை எண் : *1473.* சுவடி எண் : *745(h)*

# நந்தி (திருமூலர்) தண்டக பட்சணி

ஏடுகள் : *11(40-50).* ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : *9-10* வரிகள். கி. எண்ணிக்கை : *450.*
அளவு : *37 × 4* சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர்: நந்திதேவர் (திருமூலர்). முழுமை: முற்றுமுளது.

**தொடக்கம்;**

பூமகள் கயிலை மேவிப்
    பூரண மான தொன்றே
ஆகம வேத ஞானச்
    சுருதியு மான தொன்றே
நாகவா பரணன் பூண்ட
    நந்திதண் டக்கம் ஓத
வேகமா மதத்தின் தந்தி
    விநாயகன் காப்ப தாமே. *1*

**முடிவு :**

தாமப்பா மும்மூல வர்க்கத் தோடே
    தாமொருவ னறுகோடி சித்து மாட
நாமப்பா நந்திகுரு வான மூலம்
    நாம்கண்ட தண்டக்கம் நல்மா முற்றே. *103*

திருமூலர் தண்டக்கம் முகிந்தது
முற்றும்.
பூவீசர் சிவகாமியம்மன் பாதமே துணே.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், நீலகண்டம், அஷ்ட்டகர்மம், வசீகரம், அமுக்குரு, எட்டி, அஞ்சனம், நட்டுவக்காலி, ஆகிய தலைப்புக்கள் உள்ளன.

இது; எமது சுவடி எண் 38 (b)/D. 65, எண் 258 (d)/D. 461, போன்றது. (51—58 ஏடுகள் இல்லை)

---

வரிசை எண் : 1474. சுவடி எண் : 745(j)

# அகத்தியர் இந்திரசாலம்

ஏடுகள் : 6.(58-63) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 9—10 வரிகள். கி. எண்ணிக்கை : 250.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

கைகண்ட சருவாங்க மோகனத்துக் கேத்த
கருவான திருத்தங்கால் வாடை கேளு
மெய்தட்டும் விழிமடவார் மேனி கட்கு
விளங்குகின்ற மஞ்சள்ரெண்டு பலமும் வாங்கி

**முடிவு :**

படைத்தபின்பு சங்கோசை நாக சின்னம்
பதினெட்டு வாக்கியமும் முழங்கப் பூசை
நடத்தியல்லோ முன்சொன்ன அகோரஞ் சேவி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . 40

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், 39 செய்யுட்கள் முழுமையாக உள்ளன.



வரிசை எண் : 1475. சுவடி எண் : 745(j)

# திருமூலர் நாடிப்பரீட்சை-வாகடம்

ஏடுகள் : 10 (64-73). (64-வது ஏடு இரண்டு உள்ளன) ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 400. அளவு: 37 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : திருமூலர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

காப்பு

ஐந்துமுகத்தனை..........போற்றுகின்றேனே.

நூல்

உண்ணிய கெற்பக் குளியாம் வெளியிலே
பண்ணிய நாதம் பகர்ந்த பிரிதிவு
வன்னியு வாயிவும் மாயுரு சுக்கிலம்
மன்னிச் சமஞய் வளர்குமு தகமே.

**முடிவு :**

வியாதியள் போக வெகுநாள்ச் சடைமுறம்
பாதித் திரைநறை பாங்காய்த் தவழ்ந்திட
யோதிக் கவனங் கலந்தே சுற்றிட
பாதிப் பரஞான மஞ்சாகுஞ் சுத்தியே. 114

திருமூலர் மந்திரம் முற்றும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், பிராணுதி ஐந்து வாயுக்களின் இலக்கணங்கள், நாடி பார்க்கும் விதம், மரண நாடிக் குறிகள், இடைகலை, பிங்கலை, நாடி

விபரம், வாத பித்த கபதோஷ லட்சணம், சூலையின் லட்சணம், சந்நி லட்சணம் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 253 (b)/D. 451 போன்றது

---

வரிசை எண் : 1476. சுவடி எண் : 745(k)

# கெருட பஞ்சாட்சரம்

ஏடுகள் : 12.(74-85) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 500.
அளவு : 37 x 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

தொடக்கம் :

ஓதிய பிடாரர்க் கெல்லாம்
உற்றகோ டாலி யாகும்
வாதென வுரைத்தோர் நாவை
வலித்த வகத்தி யர்க்குங்

முடிவு :

மருந்து கயறு தனைச்சேர்த்து
வருந்தி யுலத்தி வைத்ததனை
பொருந்த விரியன் மாநாகம்
புடையன் வழலைச் சுகலத்துக்கும்
வரிந்த உச்சி துடைதொழில்
வலுவாய்க் குடோரி தானுடித்
திருந்தச் சிறுநீர் தனிலெழுதே. 18

..............................

கண்ணோய் தொண்ணூற்றுறு நில்லாத கண்டு பேர் விடுமே.

அரலம் :

இல்லை

**குறிப்பு:**

இதில், கெருடபஞ்சாட்சரம், சக்கரம், ஓரில் பதித்தல், மந்திரங்கள் சக்கரங்கள், பஞ்சாட்சரம், குளிசமாட விருத்தம், குடோரி முதலியன உள்ளன. கடைசி ஏட்டின் பின்புறம், இருமலுக்குக் கஷாயம், கண்ணோவுக்கு முதலியன உள்ளன.

79-ம் ஏட்டின் பின்புறம் 52-ம்செய்யுளுடன் முற்றும் உளது. பின்னர், 81-ம் ஏட்டில், 'இது திருமூலர் சித்தர் மூலிகாப் பிரயோகம், வெகு உயிதம்; தன் பிள்ளைகளுக்குச் சொல்லவும்' என்றுளது.

---

வரிசை எண் : 1477. சுவடி எண் : 745(1)

# அஷ்டகர்மம் முதலியன

ஏடுகள் : 7(86-92). ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 8-10 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : 37 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : குறைபாடுடையது.

**தொடக்கம் :**

கடியதோ ரஷ்ட்டகர்ம மிதனு லாகும்
வெட்டவெளி யானதோர் மெஞ்ஞான தீபம்
வேதாந்த சுளியொன்றும் வீறேனே. 2

**முடிவு:**

தாமரைநூல் காப்புக்கட்டி தேங்காயுடைத்து
ஆங் ஈங் நங் பிங் பிணபதி மகாகெணபதி
திரிலோக வசிகரி மாயிவதே யென்று 108
உருச் செவித்து செவ்வாய்க்கிழமை னுள்
பிடுங்கி குங்குமப்பூ கோரோசனை கற்பூரமுங்
கூட்டி யரைத்து திலத மிடத் திரிலோக வசியம்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், அஷ்ட்டகர்மம் தொடக்கப்பாடல் இல்லை. இடம் விட்டு எழுதப்பட்டுள்ளது. 2-ம் பாடலும் பாதிக்குமேல் உள்ளது. இதில் 14

பாடல்கள் உள்ளன. பின்னர் பாஷாண வகை (88), புகை (89), கிஷாயம், காந்தல், விக்கல், சாப நிவர்த்தி, கக்கிஷ மூலிகை முதலியன உள்ளன.

இதன் பின்னர், வைத்தியமும், அட்டவணையும் எழுதிய ஏடுகள் இரண்டு உள்ளன.

---

வரிசை எண் : 1478 சுவடி எண் : 745(m)

# கும்பமுனி சூத்திரம்-முன்னூறு

ஏடுகள் : 41. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 8-10 வரிகள். கி. எண்ணிக்கை : 1600.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : கும்பமுனி. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

பூதலத்தில் தென்பொதிகை தன்னில் வாழும்
பூரணமே யென்குருவே சிவமே அய்யா
மாதவத்தா லட்டசித்தி யெட்டும் பெத்த
வரிசையினால் வயித்தியனூல் வகையாய்ச் சொல்வேன்.

**முடிவு :**

சீலத்தி நந்தியுட பூசை பண்ணு
சேகண்டி னூதவொலி மணியி னோசை
காலத்தின் கருவறிந்து பூசை தீர்ந்தால்
கைக்குள்ளாம் வயித்திமுன் னூறு முற்றே. 301

**காலம் :**

ரத்திராக்ஷி வருஷம் ஆனி மாதம் 23-ம் தேதி புதவார நாள் எழுதி முகிந்தது முற்றும்.

**குறிப்பு :**

இதில், முதலேடு இரண்டு இருக்கிறது, இதில், காந்தசத்து, கற்பூர சலாசத்து, அப்புரக சத்து, நிமிளை சத்து, தாளகம், சூத பற்பம், சீந்தி சர்க்கரை, நாகம், அயச் செந்தூரம், துருசு செந்தூரம், முத்து மணி, தாம்பிர செந்தூரம், அயக்காந்த செந்தூரம் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 235 (a)/D 388, எண் 323 (i)/D. 630 போன்றது. பாடவேறுபாடுகள் மிகுதியும் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : 1479. சுவடி எண் : 745(b)

# கைலாசச் சட்டைமுனியார் கற்ப முறை

ஏடுகள் : 12(42-53). ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 11-13 வரிகள். கி. எண்ணிக்கை : 600.
அளவு : 37 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர்: கைலாசச் சட்டைமுனியார். முழுமை: முற்றுமுளது.

**தொடக்கம்:**

பாடுகுரேன் காயகற்பம் ஐங்கரனே காப்பு
பரிவான சின்மயத்தின் பாதங் காப்பு
நாடுகிறேன் சித்தருட பாதம் காப்பு
நாதாந்த மனோன்மணித்தாய் பாதங் காப்பு

**முடிவு:**

தூரப்பா தொட்டல்லோ முடிவரைக்குஞ் சொன்னேன்
சொல்லாதே விழித்திட்டார் சித்த ரெல்லாங்
காரப்பா குருபதத்தைக் காத்தாற் சித்தி,
காயசித்தி பாடினதோர் கற்பமுற்றே. 101

கைலாசச் சட்டைமுனிநாதர் காயகற்பம் முற்றும்
மனோன்மணித்தாய் பாதந் துணை
சட்சுதானந்த பாதார விந்தமே முன்னிற்க
தேவி சகாயம்.

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

**இதில், கடுக்காய் பற்பம், சிவனார் வேம்பு கற்பம், திரிபலை பற்பம், காந்த ரசாயனம், வழலை மார்க்கம், கரிசலாங்கண்ணி கற்பம் முதலியன கூறப்பட்டுள்ளன.**

இது எமது சுவடி எண் 26(a)/D. 43, எண் 202 (b)/D. 323, எண் 351/D. 694 போன்றது. பாடவேறுபாடுகள் மிகுதியும் உள்ளன.

---

வரிசை எண் : 1480. சுவடி எண் : 745(o)

## கருவூரார் சூத்திரம்

ஏடுகள் : 14. (54-67) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 10-12 வரிகள். கி. எண்ணிக்கை : 700.
அளவு : 37 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : கருவூரார். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

சீர்பெருகும் வேதாந்த சூத்தி ரத்தை
தெட்சணு மூர்த்திபதந் தெளிந்து போற்றி
கார்பெருகும் ஆயியுட பதமும் போற்றி
கைலாசத் திருமூலர் பதமும் போற்றி

**முடிவு :**

கரிசையென்ற யிருவினையு மகலத் தள்ளிக்
காசமறுங் கண்போல பொருளை நோக்கிப்
பிரிசையென்ற வுரைப்புவந்தால் சித்தி முத்தி
பிலக்குமடா சூத்திரந்தான் அனந்த முற்றே. 115

கருவூரார் சூத்திரம் முற்றும்
தேவி சகாயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு :**

இதில், சாரமெழுகு, இரும்பியம், தாம்பூரம், நாகரசம், சாதிலிங்க மைமுகு, ரசகமலினிக் குளிகை, அஞ்சனம், நிதியஞ்சனம், துலைய ஞ்சனம், நாகக் கட்டு, தாம்பூரசுத்தி, குளிகை, வண்டு மாங்காய், அப்புரகசத்து, அப்புரக செந்தூரம், சூத செந்தூரம், இரும்பியம் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1481. சுவடி எண் : 745(p)

# அகத்தியர் பரிபூரண சூத்திரம்-இருநூற்றுப்பதினறு

ஏடுகள் : 28.(68-95) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 9-11 வரிகள். கி. எண்ணிக்கை : 1200.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

கார் செறி மெய்யன் வெண்மை
கடவுளுங் காணுப் பாதம்
போர்பொரு ளுண்மை தன்னை
பூரண நூலிற் போற்ற

நூல்

ஒன்றான பூரணமு மாறு தாரம்
உரைத்ததற்கு மேலாறுந் தொண்ணூற் றாறும்
பன்னுன தீட்சைபதி னென்று ரெட்டி
பத்துட னொருபத்து ரெண்டு தீட்சை

**முடிவு :**

தாமிந்த சூத்திரத்தைக் கெணியா தீந்தால்
தலைதெரித்துப் போமடா சத்தியஞ் சொன்னேன்
நாமிந்தப் படிசொன்ன பேருக் கீய்வாய்
நலமான பூரணசூத் திரந்தான் முற்றே. 214

காப்புடனே விருத்தம் 216
பூரண சூத்திரம் முற்றும்.

**காலம் :**

ரத்திராக்ஷி வருஷம் புரட்டாசி மாதம் 9-ம் தேதி ஸ்ரீமது பீதாம்பர வைய்யனவர்கள் பூரண சூத்திரம் லட்சுமணபிள்ளை யெழுதி முகிந்தது முற்றும்.

குறிப்பு :

இதில், விநாயக தியானம், விஷ்ட்ணு தியானம், ருத்திரன் தியானம், மயேசுரன் தியானம், சதாசிவன் தியானம், ஏகாட்சரம், முதல் தீட்சை, சத்தி தீட்சை, சாப நிவர்த்தி, வயிரவன் தியானம், சுப்பிரமணியர் தியானம், அகத்தீசர் தியானம், வல்லாரை கடுக்காய் மூதண்ட லேகியம் முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 186 (c)/D. 296, எண் 288 (f)/D. 512, எண் 324 (f)/D. 641 போன்றது. பாடவேறுபாடுகள் உள்ளன.

---

வரிசை எண் : 1482. சுவடி எண் : 745(q).

# போகநாதர் வேத வாக்கியம்

ஏடுகள்: 6.(96-101) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 9-13 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: போகநாதர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

வாலை பூசை

ஆக்கிவைத்தே அறத்தின் பொரு ளப்பொருளை
நோக்கிவைத்தேன் உயிர்க்கெல்லாம் பொதுவுஅத னுலிதனைக்
கார்க்கலுற்றேன் கடன்பூண்ட வாதம்மடியேன் றன்மேல்
நோக்கிவைத்தே னவ்வவர்காலத் துள்ளீரு மடைக்கலமே.

முடிவு:

வீணப்பா மற்றதெல்லா நாய்வால் பற்றி
வெள்ளத்தைக் கடத்துமே யென்று யேத
பூணப்பா யிந்தமுறை யாருங் காணார்
புரையுமந்த சூத்திரந்தான் முடிவு முற்றே. 44

முற்றும்.

காலம் :

இல்லை.

**குறிப்பு :**

இதில், வாலைபூசைமுறை விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

---

**வரிசை எண் :** 1483. சுவடி எண் : 745(r)

# அகத்தியர் சூத்திரம்- அன்பது

ஏடுகள்: 7.(102-108) ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
**பக்கத்திற்கு :** 9-11 வரிகள். கி. எண்ணிக்கை : 300.
**அளவு :** 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

**காப்பு**

வானும் புவியும் மதியுங் கதிரொளிந்
தேனுந் தெளிந்து சிவகுருவே—தானுந்தான்
நால்மறையும் ஆராய்ந்து நன்னூல் சிவனபதியும்
கோலமுடன் கினேசன்றுள் கூறு

**நூல்**

மயமான முப்பூவின் மாாக்கந் தன்னை
வயித்தியத்துக் காதியாய் விரித்துச் சொல்ல
செயமான கணபதியும் கந்தன் தானும்
வேரொடும் பார்வதியும் நிருவாணியும்

**முடிவு :**

சேலான குருவுடைய செல்வனுவான்
சிந்தையிலே கள்ளமென்றால் சித்தனுவான்
நாலான மறைபோற்றும் பரமன் சொன்ன
நலமுடைய முனிமொழியில் நாட்ட முற்றே. 49

குருவே துணை
சிவகாமி துணை
தேவி சகாயம்

**காலம் :**

இல்லை

குறிப்பு:

இதில், லிங்கக்கட்டுச் செம்பு, முப்பு எடுக்கும் முறை, வைத்தியம் செய்யும் முறை, அயம், காந்தம், அப்பிரக நவநீதம், கெருடக்கல், கல்நார், அண்டக்கல், சங்கு, சலாசத்து, நவரத்தினங்கள் மனித அஸ்தி, மான் கொம்பு ஆமையோடு முதலானவை பேசப்படுகின்றன.

இது, எமது சுவடி எண் 185 (a)/D 291, எண் 236 (i)/D. 401, எண் 321 (f)/D. 608, எண் 357 (b)/D. 14 போன்றது.

---

வரிசை எண் : 1484. சுவடி எண் : 745(s)

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 8. (வெவ்வேறு ஏடுகள்) ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு: 6-9 வரிகள். கி. எண்ணிக்கை : 300. அளவு : 37 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : பலர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

பேசாமற் சொல்லுகிறேன் பூபதிதா னென்று
பிணந்திரும்பிப் பேசுமடா மருந்தைக் கேளு
பாசாணஞ் சூதலிங்கம் லோகம் வங்கம்
அப்புரகஞ் சலாசத்து வரியின் றேவி

**முடிவு :**

**திருமூலர் நாடி**

தாதாவைப்போலே தயவு கொடுப்பவன்
வேதாக மத்தின் மெஞ்ஞானமெய்ப்பொருள்
ஆதார சத்தி அரிய மனோன்மணி
மாதாவின் பாதம் வைத்தேனென் சென்னியில். 1

**கெற்ப உற்பத்தி**

சென்னியில் வைத்தே திருநந்தி தாளினை
மன்னிய காயம் வந்த வகையால்
கன்னி வகுத்த கருப்பத் திருமந்திரம்
உன்னி உரைத்தேன் ஒருநூற் றிருபதே. 2

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், தலைப்பில்லாமல் இரண்டு ஏடுகள், அட்டவணை (தேவி சகாயம்) முதலியன உள்ளன. திருமூலர் நாடியில் 2 செய்யுட்களே உள்ளன.



வரிசை எண் : 1485 சுவடி எண்: 746(a)

## (அகத்தியர்) சவுமிய சாகரம்-ஆயிரத்திருநூறு

ஏடுகள் : 167. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு: 10-12 வரிகள். கி. எண்ணிக்கை: 10,000.
அளவு : 36 × 4 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

சோதியெனும் மனோன்மணியைத் தியானஞ் செய்து
சுகமான சவுமியசா கரத்தைப் பாட
ஆதியெனுங் கணபதியும் வல்லமையுங் காப்பு
அரசான பிரமனொரு சரசுவதியுங் காப்பு
நீதியெனும் மாலுடனே லெட்சுமியுங் காப்பு
நின்றிலங்கும் ருத்திரியும் ருத்திரனுங் காப்பு
ஓதியதோர் மயேசுரனும் மயேசுபரியுங் காப்பு
உறுதியுள்ள சதாசிவனும் மனோன்மணியுங் காப்பே 1

**முடிவு :**

முற்றான சக்கரந்தான் மைந்தா மைந்தா
முழுதுமதை ஆதியந்தம் நன்றாய்ப் பாத்து
சித்தான சித்துவிளை யாடு தற்கு
சிவசிவா குருநூலால்த் தெளிந்து கொண்டு

சுத்தான சுத்துதற்குச் சோதியாகி
சோதிமய மானசிவ சூட்சந் தன்னை
பத்தான திசைதீட்சை முத்தி பெற்று
பரமபதத் தெல்கையிலே பதிவாய் முற்றே. 1195

குரு முன்னிற்க

**காலம்:**

குரோதி நாம சம்வத்சரம் சித்திரை மாதம் 27-ந்தேதி ராமசுவாமி அய்யர் ஏடு எழுதி முகிந்தது

முற்றும்
தேவி சகாயம்

**குறிப்பு :**

இதில், சாத்திரம் வந்த வகை, சவுமிய சாகரக் கருவிபரம், நாடி, நாடிதுகை, வாசலொன் பதுக்கும் பூட்டுத்தாள், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனுகதம், விலாச மகிமை, விசுத்தி விலாசம், அக்கினி விலக்கம், பூரண சந்திரன், முச்சுடரின் தியானம், சண்முகனார் தியானம், வயிரவத்தியானம், கிறுகைவளி, யோக வழி, ஞான வழி, சமாதி வகை, கணபதி, மகாகணபதி, நடன கணபதி, தம்பனம் முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 348/D. 691 போன்றது. அதற்கும் இதற்கும் பாடவேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன.

---

வரிசை எண் : 1486. சுவடி எண் : 746(b)

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 3. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு: 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
அளவு : 36 × 4 செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

**தாம்பிர பற்பம்**

அண்டத்தோடு தாம்பிர அறைபொடி சரியிடை சேர்த்து பொடுதலைச்சார் விட்டரைத்து வில்லைத் தட்டி நாலுநாள் காய வைத்து ஓட்டில் வைத்து சீலை மண் செய்து குசபுடம் போடவும்.

முடிவு:

**பிள்ளை பெறமாட்டாத பேர்களுக்கு மந்திரம்**

ஓம் நமோ பகவதே சித்த சாமுண்டி சித்த யோகினி
மம் ஹ்ரூம் பட் சுவாகா

அமாவாசை ஞாயித்துக் கிழமை சபிக்கவும் மிளகு வய்த்துப் பூசிக்கவும். ஷே மிளகை திங்கவும்.

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், தாம்பிரபற்பம், மூலத்துக்கு, அஞ்சனம், பிள்ளை பெற மாட்டாத பேர்களுக்கு முதலிய மருந்து முறைகள் உள்ளன. மைபூசப் படாத ஏடுகள்.

---

வரிசை எண்: 1487. சுவடி எண்: 747(a)

# அகத்தியர் பெருநூல்-முதற்காண்டம்-வைத்தியம்-முன்னூறு

ஏடுகள்: 60.(132.191) ஏட்டின் நிலைமை: நல்லநிலை.
பக்கத்திற்கு: 7-9 வரிகள். கி. எண்ணிக்கை: 2400.
அளவு: 34 × $3\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து: தமிழ்.
ஆசிரியர்: அகத்தியர். முழுமை: குறைபாடுடையது.

**தொடக்கம்:**

**பாயிரம்**

ஆயிரத் திருநூறு முன்னூ லாய்ந்து
முதற்காண்ட சூஷ்திர....................................
........................யிரக்கவி முன்னூறும்
உமைக்கரன் உரைக்க யீன்ற

**நூல்**

பூரணமே யோகநிரா மயமே ஞான
போதகமே பராபரமே.......................ஸ..

காரணமே சித்தறிவால் மூல வட்டக்
கணபதியே உன்மனத்தின் கருவே சோதி

**முடிவு :**

திண்டுமுண்டு செய்யாதே குலையே றாதே
தீவினைக ளாகாதே சிடம்போக் காதே
பண்டுசொன்ன என்முறையை விட்டி டாதே
பண்டிதனே வயித்தியனூல் காண்ட முற்றே, 300

முற்றும்
பெருநூல் முதற்காண்டம் முற்றும்
சிவபாதமே கெதி
குருவே துணை
தேவி சகாயம்
வெங்கிடாசலபதி சகாயமுண்டு

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில் முதல் ஏடு பின்னேயும், இரண்டாம் ஏடு முன்னேயும் ஒடிந்துள்ளன. இதில், வயித்தியத்துக்கு குருபற்பம், வியாதிகளுக்கெல்லாம் கொடி மூலக்கரு, வியாதிக்கு ஓரெழுத்து தியானம், சக்கர சூட்சம் ஒட்டுதல், மூன்று வகை சுரமாத்திரை, சன்னிதோஷம் வீச்சஞ்சும், விஷந்தீர தியானம், கரப்பானுக்கு எண்ணெய் முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1488 சுவடிஎண் : 747(b)

# அகத்தியர் பெருநூல்-இரண்டாங்காண்டம் வாதம் முன்னூறு

ஏடுகள் : 14.(192-205) ஏட்டின் நிலைமை: நல்லநிலை.
பக்கத்திற்கு : 9-10 வரிகள். கி. எண்ணிக்கை : 600.
அளவு : 34 × 3½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றற்றது.

**தொடக்கம் :**

நாகரசம்

காண்டமென்ன நாகரசஞ் சொல்லக் கேளு
கடியகோ டகசாலை கொடுப்பை வீளி
ஆண்டகொடு வேலிச்சா ரணையின் சாறு
அப்பனே செறுப்படியின் சாறுங் கூட்டி

**முடிவு :**

அரைந்திருந்த வாதமுறை கருவை யெல்லா
மானந்த மூலகுரு வருளால் வாய்க்கும்
பரைந்திருந்த சோடசமே மூலா தாரம்
பறவெளியே கடதலைக்கு காப்பு முத்தே. 291

ரண்டாங்காண்டம் வாதமுறை முற்றும்.
தெட்சணாமூர்த்தி பாதார விந்தமே கெதி,

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், 205க்குப் பிறகு 229வரை ஏடுகள் இல்லை. ஆனால் இந்நூலுக்கு ஏட்டெண் இல்லாமல் கடைசி ஏடு உள்ளது.

இதில், நாகரசம், சவுக்காரச் சுன்னம், நாகரச செந்தூரம், பெண் வேண்டாதாருக்கு நீர்ச்சோறு, கரியுப்புக் கட்டு, களங்கம், வெள்ளீயம், இரும்பு, வெடியுப்புக்கட்டு, சூத செந்தூரம், நாகம் துரிசுச் சுன்னம், பொரிக்காரக் கட்டு, அயச்செம்பு முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1489. சுவடி எண் : 747(c)

# அகத்தியர் பெருநூல்–மூன்றுங்காண்டம்

ஏடுகள் : 36(230-265). ஏட்டின் நிலைமை : சிறிதுபழுது.
பக்கத்திற்கு : 9-11 வரிகள். இ. எண்ணிக்கை : 1500.
அளவு : 34 × 3½ சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம் :

காரணமாய் ஞானவெளி கடந்து நின்ற
கற்பகமே விற்பனமே மவுன வாழ்வே
பூரணமே பஞ்சகர்த்தா யரூபியான
புண்ணியமே நிண்ணயமே பொருளே வேத

முடிவு:

வேண்டியபூ மாந்தரிகம் நால்வே தத்தால்
விளம்புவேன் வேதாந்தம் மேவு மேவும்
ஆண்டவனே விட்டகுறை யுரைத்தார் சொன்ன
ஆனந்த திரிகாண்ட முன்னூர் முற்றே. 301

குருவே துணை.

தெட்சணாமூர்த்தி துணையுண்டாக வேண்டியது.

காலம்:

இல்லை

குறிப்பு :

இதில், வசிய மை, கண்கட்டு வித்தை, மாரணம், லாட சிங்கி, ஆகிருஷணம், தெரிசிக்க உருமாற்றம், யெதிரேட்டு, மோடி, பிண்டக் கரு மை, வலியாள் முட்டை, ஆள்க்காட்டி, ஆந்தை நீறு, கோட்டான் நீறு, அண்டபிண்டம், மோடிக் கரு, ருத்திர சிவம், அனுமன், யெரி மோடி முதலியன உள்ளன.



வரிசை எண் : 1490. சுவடி எண் : 747(d)

# அகத்தியர் பெருநூல்-நாலாங்காண்டம் சாலத்திரட்டு

ஏடுகள்: 36.(266-301) ஏட்டின் நிலைமை: நல்லநிலை.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1400.
அளவு : 34 x 3½ செண்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

காப்பு

முன்னுரைத்த காண்டவளி முத்த மிழ்க்கு மாந்திரிய
பின்னுரைத்த திங்கள் முட்டும் வெளியாய்ப்—பன்னுரைத்த
குஞ்சரமே மூலக் குமார விநாயகனார்
கஞ்சமலர்ச் சேவடியே காப்பு.

நூல்

சேவேறு மென்குருவே மாந்த ரீயஞ்
செகச்சால மாடவுந்தான்

**முடிவு:**

ஆளுவா யாயிரத் திருநூற் றையு
மீளுவா ராரணெ விடாதே வெளிதனில்
சூளுவார் சாபந் துடருமே ஒன்னே
................ கேள்ப்பது முற்றே. 300

சின்மயானந்த குரு பாதார விந்தமே துணே.
கோபால மூர்த்தி துணே.

**காலம்:**

சருவசித்தி வருஷம், பைங்கூனி மாதம் 5-ம் தேதி புதன் கிழமையும் பூச நட்சேத்திரமும் பக்கம் பிரதமையும் லக்கனஞ் சிங்கமும் கூடிய சுபயோக சுபதினத்தில் தெட்சணாமூர்த்தி யருளிய பெருநூலாயிரத்திருநூறும் நாலு காண்டமாய்ப் பாடின சாலத்திரட்டு சிகச்சால விதி, பழனியாண்டி பண்டிதன் மகன் முத்துசாமி பண்டிதன் ஏடு எழுதி முகிந்தது முற்றும்.

குரு பாதமே கெதியுண்டாக வேண்டியது.

**குறிப்பு:**

இதில், சிதம்பர சக்கரம், சரசுபதி, லட்சுமி, குறளி, யெடுத்தாடும் பாவை, மாரணக்கரு, தவளே, பல்லி, சற்பம், கீறி, மணியன், ஆந்தை, தூதாட்ல், கொக்குமணி, பிராந்தெடுத்த குஞ்சுமணி, அட்ட வயிரவன், அண்டபிண்ட இருளன், படும்பார்வைக்கும் பார்வை, சீன்னமாடன் குட்டிச் சாத்தி, உடும்பு முதலியன உள்ளன.

தெட்சணாமூர்த்தியே அகத்தியர் போலும்.

வரிசை எண் : 1491 சுவடி எண் : 748

# சகல கலைக்கியான காண்டம்-ஆயிரத்திருநூறு

ஏடுகள் : 163. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
பக்கத்திற்கு : 9 வரிகள். கி. எண்ணிக்கை : 7000.
அளவு : 33 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அறியக்கூடவில்லை. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

ஆதிபரா பரத்தினுட கிருபை கூர்ந்து
அன்பான மனோன்மணியைத் தொழுது போற்றி
சோதியெனுங் கமலமலர்த் தழுற்த முண்டு
சுந்தரம்போல் வாதத்தி லட்சங் காப்பு
நீதிபெற வயித்தியத்தில் ரண்டு லட்சம்
நிலைத்ததொரு சூத்திரத்தில் கோடா கோடி
வாதியெனும் பேர்படைத்த பெரியோர்க் கெல்லாம்
மனமகிழ்ந்து கருக்குருவாய் வசனித் தேனே.

**முடிவு :**

அறிவாக மனதடங்கி மவுன மாக
அப்பனே நூலெடுத்து பாரு பாரு
குறியான குருபதத்தில் குணமாய் நின்று
குணமில்லார் தங்களிடங் கூட வேண்டாம்
பரியான தங்கமடா பரப்பிரம்ம மாச்சு
பாலகனே தங்கமென்றால் பூரணமே தங்கம்
நெறியான பூரணத்தைத் தினமும் நோக்கி
நேரான பராபரத்தின் சார்வாய் முற்றே. 1200

குருபாதமே கெதி.

**காலம் :**

கீலாக வருஷம் ஆவணி மாதம் முதல் தேதி சின்னம்மனூரி லிருக்கும் பீதாம்பர சுப்புவையரவர்களுக்கு மேற்படி ஊரு வெயிக்கு வாத்தியார் அழகிரி செட்டியார் மகன் ராமசாமி எழுதிக் குடுத்த சகலகலை கலைக்கியானம் சாத்திர முற்றும்.

சரசுபதி துணை
சிவகாமி துணை செய்யவும்.
வேலுண்டு; வினையில்லை.

குறிப்பு :

இதில், உபதேசம், நூல் விபரம் பார்க்க, சிதம்பரம், சத்தி தீட்சைக்கு சிதம்பர மேரு, அனைத்து கற்பங்கொள்ள, மும்மூலமறிய, அகார தீட்சை குணம், உகார தீட்சை குணம், சடாட்சரம், கணபதி, மானத பூசை, தூரியஹமாலம்-சவுக்காரஞ்சுத்தி முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1492. சுவடி எண் : 749(a)

## அகத்தியர் பெருநூல் நாலு காண்டம்-முதற்காண்டம் வைத்தியம்-முன்னூறு

ஏடுகள் : 69.(மை பூசப்படாதவை) ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு : 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 1000. அளவு : $28\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ. மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம் :

காப்பு

ஆயிரத் திருநூற் முன்னூ
லாய்ந்து முற்காண்ட சூஷ்த்திரம்
..................................
தாயெனக் குரைக்க யானும்
சாத்திய நூலு தானே. 1

நூல்

பூரணமே யேகநிரு மயமே ஞான
போதகமே பராபரமே வெளியேஆதி
..................................
வாரணமே பிரணவமே எந்தாய் வள்ளி
மயில்த்தெய்வம்க் குஞ்சரணங் காப்புத் தானே.

முடிவு :

உண்டுவா குருவுண்டு மருந்து முண்டு
உலகமுண்டு நன்மையுண்டு யுதவி யுண்டு
கண்டுபார் சிவனுண்டு பூசை யுண்டு
கருத்துண்டு வளியுண்டு விளியு முண்டு
திண்டுமுண்டு செய்யாதே குலேயே ருதே
தீவினைக ளாகாதே சிடம்போக் காதே
பண்டுசொன்ன யென்முறையை விட்டி டாதே
பண்டிதனே வயித்தியநூல் காண்ட முற்றே. 300

பெருநூலு முதற்காண்ட முற்றும்.
குருவே துணை.

காலம் :

இல்லை

குறிப்பு:

இதில், யோகி நடத்தை, கருனுவி, வெள்ளை நாவி, பாசாணம் குளிகை பலசிலந்திக்கியெண்ணெய், கஸ்த்தூரிப்பிள்ளை, மாத்திரை, சுரத்துக்கு எண்ணெய், நேர்வளக் குளம்பு, வசீகரம், தாளகசெந்தூரம், ஸ்ரீராமபாணக் குளிகை, இடிமருந்து ரசபாணம் குளித்தயிலம், அரிதார உண்டை முதலியன உள்ளன. பாயிரம் பத்து செய்யுட்கள் இருக்கின்றன.

இது எமது சுவடி எண் 747 (a)/D. 1487 போன்றது. பாடவேறுபாடுகள் மிகுதியும் காணப்படுகின்றன.

---

வரிசை எண் : 1493 சுவடிஎண் : 749(b)

## அகத்தியர் பெருநூல் நாலுகாண்டம்-இரண்டாங்காண்டம்-வாதர்-முன்னூறு.

ஏடுகள் : 62 (70-131). (மை பூசப்படாத ஏடுகள்) ஏட்டின் நிலைமை : நல்லநிலை. பக்கத்திற்கு : 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 1000. அளவு: $28\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ. மீட்டர். எழுத்து : தமிழ். ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

**நாகரசம்**

காண்டமென்ன நாகரசஞ் சொல்லக் கேளு
கடியகோ டகசாலே கொடுப்பை விளி
ஆண்டகொடு வேலிச்சா ரணையின் சாறும்
அப்பனே செருப்படியின் சாறும் கூட்டி
மிண்டாசட் டியில்வார்த்து நாகம் வாங்கி
மிளம்பியசார் யுடன்கலந்து யெரிப்பாய் சாமம்
ரெண்டுவிடும் வலியுமடா கட்டிப் போச்சு
வாதமென்ன இம்மருந்தை மாட்டு மாரி. 1

**முடிவு:**

விரைந்தெழுந்த மூன்றெழுத்தின் தீட்சை பாரு
விளம்புவோம் வயித்தியகாண் டத்தில் சொன்னோம்
நிரைந்திருந்த சுத்தியடா அண்ட பிண்டம்
நேர்ந்திருந்த சிவகலேயே வெளியு மாச்சு
அரைந்திருந்த வாதமுறைக் கருவை யெல்லாம்
ஆனந்த மூலகுரு வருளால் வாய்க்கும்
பரைந்திருந்த சோடமோ மூலா தாரம்
பரவெளியே கடதலேக்குக் காப்பு முற்றே. 298

இரண்டாங் காண்டம் வாதமுறை முற்றும்.
தெட்சணாமூர்த்தி பாதாரவிந்தமே கெதி.

**காலம் :**

இல்லே

**குறிப்பு :**

இதில், நாகரசம், நாகக்கட்டு, முள்ளெலி, ரசமணி, வெடியுப்புக் குரு முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 747 (b)/D. 1488 போன்றது. பாட வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன.

———

வரிசை எண்: 1494. சுவடி எண்: 749(C)

# அகத்தியர் பெருநூல் நாலுகாண்டம்-மூன்றுங்காண்டம்

ஏடுகள்: 62. (132.193) (மை பூசப்படாத சுவடி) ஏட்டின் நிலைமை: நல்லநிலை. பக்கத்திற்கு: 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 1000. அளவு : 28½ × 2½ செ. மீ. எழுத்து : தமிழ். ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம் :**

காரணமாம் ஞானவெளி கடந்து நின்ற
கற்பகமே விற்பனமே மவுன வாழ்வே
பூரணமே பஞ்சகர்த்தா யரூபி யான
புண்ணியமே நிண்ணயமே பொருளே வேத
வாரணமே நிறைந்த பிரணவமே செல்வ
மயில்க்குகனே குமரகுரு பரனே ஆதி
நாரணனே நான்முகனே முகமைந் தான
நாதபர விந்தபதங் காப்புத் தானே. 1

**முடிவு:**

காண்டவளி முன்முன்னே யல்லால் வேறே
கருதவில்லை வேறொருத்தர் நூல்பாத் தேது
தூண்டவிளக் கெரியுமென்று முன்னோர் சொன்ன
சொல்படியே வித்தைவயித்தியம் போன வாதம்
வேண்டியபூ மாந்தரிகம் நால்வே தத்தால்
விளம்புவேன் வேதாந்தம் மேவும் மேவும்
ஆண்டவனே விட்டகுறை யுரைத்தார் சொன்ன
ஆனந்த திரிகாண்ட முன்னூற் முற்றே. 300

குருவே துணை.
தெட்சணாமூர்த்தி துணையுண்டாக வேண்டியது.

**காலம்:**

இல்லை

குறிப்பு:

இதில், வசிய மை, கண்கட்டுவித்தை, மாரணம், லாட்சிங்கி, ஆகிருஷணம், தெரிசிக்க உருமாற்றம், மோடி, பிண்டக்கரு மை, வலியான் முட்டை முதலியன உள்ளன. 300வது செய்யுள் இரண்டு உள்ளன.

இது, எமது சுவடி எண் 747 (c)/D. 1489 போன்றது. பாட பேதங்கள் மிகுந்துள்ளன.

---

வரிசை எண் : 1495. சுவடி எண் : 749(d).

# அகத்தியர் பெருநூல் நாலுகாண்டம்-நாலாங்காண்டம்

ஏடுகள் : 51. (195-245) (மை பூசப்படாத ஏடுகள்) ஏட்டின் நிலைமை : நல்லநிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 7-8 வரிகள். கி. எண்ணிக்கை : 1000. அளவு : $28\frac{1}{2} \times 2\frac{1}{2}$ சென்டி மீட்டர். எழுத்து: தமிழ். ஆசிரியர்: அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம்:

காப்பு

முன்னுரைத்த காண்டவளி முத்தமிழ்க்கும் மாந்திரிய
முன்னுரைத்த திங்கள்முட் டும்வெளியாய்—பன்னுரைத்த
குஞ்சரமே மூலக் குமார விநாயகனுர்
கஞ்சமலர்ச் சேவடியே காப்பு.

நூல்

சேவேறு மென்குருவே மாந்த ரீயஞ்
செகச்சால மாடவுந்தான் செப்ப வேண்டி
மாவேறுங் கருவிடையி லிருந்த சோதி
மணவிடைமே லேறிமலர்ப் பாதம் போத்தி

**முடிவு:**

ஆளுவா யாயிரத் திருநூற் றையு
மீளுவா ராரனே விடாதே வெளிதனில்
சூளுவார் சாபந் துடருமே வுன்னை
கேளுமே நன்மை கேள்ப்பது முற்றே. **300**

குருபாதமே கெதி
ராமச்சந்திர பகவான் துணை.
1200 எழுதி முடிந்தது முற்றும்.
எழுதினது வாத்தியார் ராமசாமி செட்டி
சிவகாமி துணை செய்யவும்.

**காலம் :**

இல்லை.

**குறிப்பு :**

இதில், 194வது ஏடு இல்லை. இதில், சிதம்பர சக்கரம், சரசுபதி. லட்சுமி, குறளி, யெடுத்தாடும் பாவை, மாரணக்கரு முதலியன உள்ளன.

இது, எமது சுவடி எண் 747 (d)/D. 1490 போன்றது. பாட வேறுபாடுகள் மிகுதியாக உள்ளன. இதன்பின்னர் வைத்தியம் எழுதிய இரண்டு ஏடுகள் உள்ளன.

---

வரிசை எண் : *1496* சுவடி எண்: **750(a)**

# அகத்தியர் பெருநூல் ஆயிரம்

ஏடுகள் : 143. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : **6000.**
அளவு : 32 × 3 சென்டி மீட்டர். எழுத்து : **தமிழ்.**
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

ஓமென்ற மூலகண பதியே காப்பு
உண்மையுடன் நடுமனையை உகந்து நின்ற
ஆமென்று அமுர்தகலை யுள்க்கொண் டேதான்
அடங்கிநின்ற மனோன்மணியின் அருமை யாலே

ஊமென்ற உண்மைதனே மவுன மாக
உருப்பெற்றுக் கருப்பெற்று உறுதி பெற்று
தாமென்ற மதிதன்னே யொவியில் தாக்கி
சச்சுதா னந்தமென்ற ஆதி காப்பே 1

முடிவு :

முத்தான சிவமயமே யாற்றுமா வாகி
முழங்கிநின்ற நாதமடா சோதி யாகுஞ்
சித்தான சித்ததுதா னறிவா னந்தஞ்
சின்மயமாய் நின்றதுவே விந்து வாகும்
வித்தான வித்ததுதான் ஒளிகண் பார்வை
யேகாந்த பூரணமே தாந்தா ளுகும்
பத்தான திசைதீட்சை தன்னி லேதான்
பத்தியுடந் தானறிவா யப்பது முற்றே. 1000

காலம்:

இல்லே

குறிப்பு :

இதில், சிதம்பர சக்கரம், சீசனுக் குபதேசம், மதிபார்க்க பூசை, சூரிய பூசை, அஷ்ட்டாங்க வரிசை, தம்பனம், மோகனம், மாரணம், உச்சாடனம், வசியம், கிரிசனம், பேதனம், வித்துவேசனம்,மெஞ்ஞான சக்கரம், சற்குரு தியானம், முதலியன உள்ளன.



வரிசை எண் : 1497. சுவடி எண் : 750(b)

# அகத்தியர் இருநூற்றைந்துக்குச் சுருக்கம் இருபத்தொன்று

ஏடுகள் : 5. ஏட்டின் நிலைமை : நல்லநிலே.
பக்கத்திற்கு : 6—8 வரிகள். கி. எண்ணிக்கை : 100.
அளவு : 29 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

தொடக்கம் :

கேளப்பா நவலோக மார ணந்தான்
கெடியான வயித்தியமா மிருநூத் தஞ்சில்
தேளப்பா கொட்டுதல்போல் இந்தச் சூத்திரஞ்
சொல்லுவே னிரும்புக்குத் தாரங் கெந்தி
வாளப்பா வெள்ளிக்கு வங்கத் துக்கு
மால்தேவி வெடியுப்பு வெள்ளை சீனஞ்
சூளப்பா செம்புக்குக் கெந்தி வங்கஞ்
சூதமொடு துருசுவெள்ளை சார மூன்றே. 1

முடிவு :

நாமப்பா பற்பமுதல்த் தயிலம் நன்றாய்
நன்றாகக் கருக்கிடையும் பாகம் சொன்னேன்
நாமப்பா வெளிதோணச் சொன்னோம் பாரு
நலமுள்ள இருபத்தி ஒன்று முற்றே. 21

குருபாதமே கெதி

சரக்கு மாரணம்

வங்கஞ்செம் பொன்னிக்கா மாச்சீயம் வெள்ளிக்காம்
யெங்கும் லிங்க மிரும்புக்காந்--தங்கத்தைத்
தாரமே கொல்லுந் தனிராச போகமதாஞ்
சேருமே செம்புக்குக் கெந்தியெனச் செப்பு (?)

சரக்கு மாரணம்

காலம் :

இல்லை

குறிப்பு :

இதில், சவுரிவேர்த் தயிலம், வில்லைவேர்த் தயிலம் வேங்கைத் தயிலம், வெட்டிவேர்த் தயிலம், வேப்பம்பட்டை, குருந்தொட்டி, கொடுவேலி, சீரகம், கீழ்க்காய் நெல்லித் தயிலம், சங்கின் வேர்த் தயிலம், அமுக்கிராத் தயிலம், இஞ்சித் தயிலம், செம்முள்ளித் தயிலம், இருவேலித் தயிலம், களிப்பான், அகில்க்கட்டை, அருகம்வேர், கொடுப்பை, சென்னகற் அபின் இருப்பவல் முதலியன உள்ளன.

இது எமது சுவடி எண் 317 (I)/D. 590 போன்றது. பாட வேறுபாடுகள் மிகுதியும் காணப்படுகின்றன.

இதன் பின்னர், வைத்தியம் எழுதிய ஏடுகள் மூன்று உள்ளன.

வரிசை எண் : 1498. சுவடி எண் : 751(a)

# பொதிகை மாமுனி சத்திசாலம்-ஆயிரத்திருநூறு முதற்காண்டம்

ஏடுகள் : 71 (44வது ஏடு இல்லை). ஏட்டின் நிலைமை : நல்ல நிலையில் உள்ளது. பக்கத்திற்கு : 8-9 வரிகள். அளவு : 19 × 3 செண்டி மீட்டர்- எழுத்து : தமிழ். கி. எண்ணிக்கை : 1200. ஆசிரியர் : அகத்தியர். முழுமை: முற்றுமுளது.

**தொடக்கம்:**

சிவமயம்

ஆமென்ற பூரணு னந்தவொலி
ஆதியந்தஞ் சற்குருவின் வாயு நின்ற
ஓமென்ற நாதவிந்து மதிவீடாக
உத்துநின்ற திரோதாயி மவுனவாலே
நாமென்ற மகாமேரு பாவியின்கூர்
நடனவொலி யகண்டமுகப் பறமாக
வேமென்ற நந்திபதங் கருணைகூர்ந்து
விளம்பினேன் விமலரடி காப்புத் தானே. 1

**முடிவு:**

பேறுபெற யினியுரைக்கு மிரண்டாங் காண்டம்
பிரமலவி யுள்ளவர்கட் கெய்து மெய்தும்
நூறுவரை யிருத்துமடா காண்டமுதக் காண்டசாலம்
நோக்குமுள்ளே பத்திசத்தி சித்தி முற்றே. 195

முதல்க்காண்ட முகிந்தது

முற்றும்

குரு முன்னிற்கவும்

**காலம்:**

இல்லை

**குறிப்பு:**

இதில், கூர்மச் செயநீர், நாகச் செயநீர், பூசைக்கு முப்புரி மூலியிரவு, சதிரி பார்வை, சதிரியானம் விஞேதம், பூ பேர், லாடமூலம், பற்பம், கற்பம் வரையதிசயம், மேனுன பூசை, தங்கங்கட்டின பூசை, அன்பத்தொன்றட்சரம், மாயாசித்து முதலியன உள்ளன.

---

**வரிசை எண் :** 1499. **சுவடி எண் :** 751(b)

# பொதிகை மாமுனி ஆயிரத்திருநூறு-இரண்டாங்காண்டம் இந்திரசாலம்

ஏடுகள் : 59. ஏட்டின் நிலைமை : நல்ல நிலை.
**பக்கத்திற்கு :** 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 1000.
**அளவு :** 19 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
**ஆசிரியர் :** அகத்தியர். முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

சித்திக்குந் தேவரது வாதி செகவசிய
முத்திக்கு மூலப்பதம்போத்தி முன்னுரைப் போனவளி
சத்திக்குஞ் சாலமிகு நூறுபாடலுந் தானுரைக்க
அத்திக்கரி யுரிகொண்டோன் ரண்டாம்பத மாதிவஸ்த்தே

**முடிவு :**

பாராதே சிவகொடுமை செய்தி டாதே
பார்வதி சிவகாமி பாதத் தாணை
கூருதே யாவருக்கும் பாத கத்தை
கொல்லாதே சீவசெந்து நீயென் றெண்ணு
சேராதே ஊண்கொழுப்பு யீடு வாடை
செய்யாதே செத்தபெணக் கருவை நாளு
மோராதே ரண்டாங்காண் டத்தை விட்டு
எரியாதே யிருநூறுந் தாமும் முற்றே. 200

ஆக காண்டம் 2க்கு விடுத்த துகை 400
குருபாதமே கெதி

**காலம்:**

இல்லை

**குறிப்பு :**

இதில், வராகி நெய், திராவகம், செவிநோய், உஷ்ண ரோகத்துக்கு விக்கலுக்கு, சன்னி தோஷத்துக்கு, சல்லிய விஞ்சை, உச்சாடனம், வசியம், பேய் மாரணம், எதிராளி வசியம், நயன ரோகத்துக்கு முழுக ரசமணி, அடவித்தை, வயித்தியம், சன்னிக்கி, அரையாப்புக்கு முதலியன உள்ளன.

---

வரிசை எண் : 1500. சுவடி எண் : 751(c)

# தெட்சணுமூர்த்தி சாலத்திரட்டு-மூன்ருங்காண்டம்

ஏடுகள் : 49(60-108). ஏட்டின் நிலைமை : நல்லநிலை.
பக்கத்திற்கு : 8-9 வரிகள். கி. எண்ணிக்கை : 900.
அளவு : 19 × 3 சென்டி மீட்டர். எழுத்து : தமிழ்.
ஆசிரியர் : தட்சிணுமூர்த்தி. முழுமை : முற்றுமுளது.

**தொடக்கம்:**

இந்திரவி மதிசேர் மனிசமே வாயுவு
யேதுமில்லை யீசனடி யிணையைப் போத்தி
மந்திரமுங் கருவிடைய மான வாறும்
மகத்தான ஞானவளி வடிவே மூலம்
ஐந்துகரத் தும்பிமுகன் பிரண வட்ட
ம்வனிருந்த விதிப்போ தத்தை
செந்திருவை யுமையையேனத் திருந்த சோதி
சீவகளையயறிந்த மூர்த்திபாதம் சேர்ந்து காப்பே. 1

**முடிவு:**

காரு சால நூல்மூணு காண்டமுந்
தேரு வீதியாந் தேரு தேருநீ
போரு வீரமே பூமி ஞத
மேரு மோடா காண்ட முற்றுமே. 200

தெட்சணாமூர்த்தி சாலத்திரட்டு மூன்றாங் காண்டம்
முற்றும்
குருவாழ்க. குருவே துணை.
தேவி சகாயம்
சிவமயம்

**காலம் :**

இல்லை

**குறிப்பு:**

இதில், ஆந்தை, கூகை, வித்தை, காரண்ட வித்தை, மைனாக்கு ஞாலத்திரட்டு, அருச்சருவில் மை முதலியன உள்ளன.

---